T. நகர் இப்பொழுது திருவொற்றியூரில்

# தூத்துக்குடி மெட்டல்ஸ்,

No: 196, T.H. ரோடு,
திருவொற்றியூர்,
சென்னை - 600 019



## 21-ஆம் ஆண்டு நிறைவு விழாவும்
## புத்தாண்டு சிறப்பு விற்பனையும்
## 30.12.05 முதல் 15.1.06 வரை

கல்யாண சீர்வரிசை பாத்திரங்கள், வீட்டு உபயோகப் பொருட்கள்,
பரிசுப் பொருட்கள் நியாயமான விலையில் வாங்க
இன்றே வருகை தாருங்கள்!

Prop. V.V. செல்வக்கனி நாடார் & சன்

**பாத்திர வியாபாரத்தில் 50 வருட அனுபவம் பெற்ற நிறுவனம்.**

# இருஇரு இம்புரு!

✉ சபரிமலை, மேல்மருவத்தூர் பக்தர்களையும் எய்ட்ஸ் நோயாளிகளையும் ஒப்பிட்டுப் பேசியுள்ள கி. வீரமணியின் பகுத்தறிவு நகைப்புக்குரியது.
**கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்.**

✉ தெய்வபக்தியையும் வியாதிகளையும் இணைத்து உதாரணம் காட்ட திராவிடத் தலைவர்களால்தான் முடியும்.
**ஈரோடு -1, சாந்தி கல்யாண்குமார்.**



✉ நடிகர் கார்த்திக்கைப் போட்டுத் தாக்கியிருந்த பரமுவின் பத்துக் கேள்விகளும் படு நக்கல்!
**நெய்வேலி, சாந்திசுந்தர்.**

✉ 'என்னுயிர்த் தோழி' கட்டுரையில் எம்.எஸ். அம்மாவின் வெள்ளைச் சிரிப்பு, இதயம் கொள்ளை கொண்டது.
**நெல்லை - 7, என். கோமதி.**

✉ பிள்ளையையும் கிள்ளிவிட்டு தொட்டிலையும் ஆட்டும் 'பவார்- கங்குலி'யின் கார்ட்டூனைக் கண்டவுடன் சிரிப்பைக் கட்டுப்படுத்த முடியாமல் கலகலவெனச் சிரித்தேன். கனகச்சிதமான கார்ட்டூன்.
**சர்க்கார்பதி, பி.ஜெயப்பிரகாஷ்.**

✉ புத்தாண்டின் தொடக்கத்தில் 'கமலின் புதிய (ு)சதி' வியப்பூட்டியது!
**சென்னை - 39, சுகந்தி நாராயண்.**



✉ பல கட்டுரைகளுக்கு 'புதிய, புது' என்று தலைப்பிட்டு, 'புதுமை ஸ்பெஷல்' ஆக்கிட்டீங்களே!



**பெங்களூர் - 40, யமுனா ரெங்கநாதன்.**

✉ தலையங்கம் படித்தேன். ஏற்கெனவே ஆறு பேர் மரணமடைந்த சம்பவத்தின் மூலம் காவல் துறை பாடம் கற்றிருக்க வேண்டும் என்று சொல்லியிருப்பது மிகவும் சரிதான். ஆனால், அதே

**வட்டமேஜை**

பாடத்தைப் பொதுமக்களும் கற்றிருக்க வேண்டும் என்பதும் மறுக்க முடியாத உண்மை.
**மதுரை, என். பாலகிருஷ்ணன்.**

✉ 'மியூஸிக் தெரபி' பற்றிய காஞ்சிப் பெரியவரின் கருத்து சத்தியமான உண்மை.
**மதுரை - 16, எஸ். சீனிவாசன்.**

✉ கட்சிக்குள் ஒற்றுமையில்லாத நிலையைக் கூட 'வளர்ச்சியாக' நினைக்கும் வாசனை, தலைவராகப் பெற்ற தமிழக காங்.வாழ்க!
**ஆர். பிரகாஷ், பொன்மலை.**

✉ சீசன் சிந்தனைகளில் தும்புருவின் விமர்சனம் துருதுரு!
**சென்னை, ஜே. துரைராஜ்.**

✉ 'எங்கே என் கண்ணன்?' தொடர்கதைக்கு ஓவியர் வேதா வரைந்திருந்த சித்திரத்தின் தலையில், கதைப்படி கிளி உட்கார்ந்திருக்க வேண்டும், குருவி அல்ல!
**சென்னை - 87, பா. கண்ணன்.**



✉ பிரபலங்களின் 'சபதம் 2006' கற்பனை என்றாலும் குசும்பு கொப்புளித்தது! அதிலும் நம்ம எஸ்.ஜே. சூர்யாவின் லொள்ளு தாங்க முடியவில்லை!
**சென்னை - 92, குவளை எழில்.**

✉ ராஜேஷ்குமார் என்றாலே எதிர்பாராத 'கிக்'குடன் கூடிய திருப்பம்தான். 11:59:59 சிறுகதையிலும் அது இயல்பான முறையில் இனிமையாக மலர்ந்திருந்தது!
**சென்னை - 78, கே.எஸ். நாராயணன்.**




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
கி. ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்
மு.மாறன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யுஎஸ். டாலர்
இலங்கை : ரூ.2110/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு

# வேட்பாளர் செலவுகளை அரசு ஏற்கலாமா?



* ஜிகினா அரசியல்!



* அதிரடி அறிக்கை!

* செல்வாக்கு ஸ்டடி!

● க.மு. சுந்தரம், சிலமலை.

? தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர்களின் செலவுகளை அரசே ஏற்கும் யோசனையை மத்திய அரசு தேர்தல் ஆணையத்திற்கு அனுப்பியுள்ளதாமே?

! அதற்கும் அதிகமாக வேட்பாளர்களும் கட்சிகளும் செலவழிக்க மாட்டார்கள் என்பதற்கும், ஆட்சியில் உள்ளவர்கள், அரசு யந்திரத்தை வோட்டுப் பெறும் நோக்கில் பயன்படுத்த மாட்டார்கள் என்பதற்கும் என்ன உத்தரவாதம்? தேர்தல் சீர்திருத்தம் என்பது தொட்டுத் தொட்டுச் செய்வதல்ல. இரும்புப்பிடியாக ஒரு பிடி பிடித்து, அடி முதல் நுனி வரை செம்மைப்படுத்த வேண்டும்.

● ஜோ. ஜெயக்குமார்,
நாட்டரசன்கோட்டை.

? சமீபத்தில் தராக வியந்த விஷயம் எது?

! ஆர்.எஸ்.எஸ்.ஸுக்கு பா.ஜ.க பேரில் எந்தவிதமான கட்டுப்பாடும் கிடையாது என்று ராஜ்நாத் சிங் முதல் அறிக்கையையே அதிரடிப் பொய்யாகவும் அத்வானியின் அறிக்கைக்கு நேர்மாறாகவும் விடுத்தது!

● ஆர். வஸந்தா,
சென்னை - 28

? '1.1.06 கல்கி இதழில்,

# நீங்கள் கேட்டவை - தராசு

'வாக்காளர்கள் நல்லவர்களுக்கு மட்டுமே வோட்டுப் போட முடிவு செய்தால்தான் விமோசனம்' என்று ஒரு கேள்விக்குப் பதில் கூறியிருக்கும் தராசே! ஒருத்தரை நல்லவரா என்று அளக்க ஏதாவது தராசு உள்ளதா?

! கட்சிக் கண்ணோட்டத்தில் பேசப்படுகிற சொற்களை அப்படியே ஏற்காமல் மனசாட்சி என்கிற தராசில், தகுதிகள் என்ற எடைக் கற்களை வைத்து வேட்பாளரை எடை போடுவது சாத்தியமே. இதைவிட முக்கியம், கட்சித் தலைவர்கள் இந்தப் பரீட்சையில் வெற்றி பெறக் கூடியவர்களையே வேட்பாளர்களாகத் தேர்வு செய்வதாகும். தகவல் பெறும் உரிமை சட்டம், வேட்பாளர் விஷயத்திலும் செல்லுபடியாக வேண்டும்.



● தியேட்டர் கொண்டாட்டம்

● கே.என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

? லாலு பிரசாத் யாதவ் கருணாநிதி இல்லம் சென்று தன் மகளை அறிமுகம் செய்து வைத்துள்ளாரே?

! டில்லியிலிருந்து வரும் ஆட்சியாளர்கள் கோபாலபுரத்தில் அடெண்டன்ஸ் மார்க் பண்ண வேண்டும் என்பது இன்று எழுதப்படாத சட்டம். ராஷ்டிரிய ஜூனியர் தளம் (RJD) உடன் சென்றதில் வியப்பில்லை.

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை.

? பிராமணர் சங்க மாநாட்டில் அரசியலில் நுழைந்து அதிகாரத்தைக் கைப்பற்ற தீர்மானம் போட்டிருப்பது பற்றி...?

! நமது ஆழ்ந்த அனுதாபங்கள்.

● எஸ்.எம். ஷாஜஹான், மேலப்பாளையம்.

? சூப்பர் ஸ்டாரின் சிவாஜி எப்போது வெளிவருகிறது?

! இந்த வருடம் ரஜினி ரசிகர்கள் தீபாவளியை வீட்டில் கொண்டாட மாட்டார்கள்!

● வி.எம். செய்யது புகாரி, அதிராம்பட்டினம்.

? நடிகை சினேகா ஏன் இப்படிக் கண்ணாமூச்சி ஆடுகிறார்?

! இந்தாங்கப்பா விஷ்ணுவல்தாசன், மருதன், முத்துக்குமார், ச.ந. கண்ணன்... சினேகாவுக்கு கோலிவுட்டில் டிமாண்ட் குறைஞ்சுட்டு வருதா, கொஞ்சம் ஆராய்ச்சி பண்ணுங்க!

● த.சத்தியநாராயணன், அயன்புரம்.

? விஜயகாந்தின் திருமண மண்டப இடிப்பின் பின்னால் இருப்பது அரசியலா? மக்கள் நலனா?

! விஜயகாந்தும் டி.ஆர். பாலுவும் மக்கள் நலன் என்று கருதி ஒத்துப்போனால்கூட மற்றவர்கள் அதை அரசியலாக்காமல், சிண்டு முடியாமல் விட மாட்டார்கள் போலிருக்கிறதே! சரியான நாரதர்கள்பா!

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? ''யாருக்கு என்ன வருமோ அதைத்தான் செய்யணும். எனக்கு சினிமாதான் சரி'' என்கிறாரே பாக்யராஜ்?

! தராசுக்கு பத்திரிகைத்

● கவிட் சக்ஸஸ்!



துறைதான் சரி என்கிறார் தராசு. இப்படியே ஒவ்வொருத்தரும் மற்றவர் விஷயத்தில் மூக்கை நுழைக்காமலிருந்தால் உலகம் எவ்வளவோ நன்றாயிருக்கும். ஹூம்! ஹூம்!

● ஆர். நாகராஜன்,
சென்னை - 117★

? பல துறைகளிலும் வெகுவாக முன்னேறியுள்ள பிராமணர்களும் இட ஒதுக்கீடு கேட்பது நியாயமா?

! அவர்களிலும் பரம ஏழைகள், முன்னேறாதவர்கள் ஏராளமாக உண்டே! தகுதியிருந்தும் வாய்ப்பிழந்தவர்கள் நாடெங்கும் கோடிக்கணக்கில் உள்ளனரே! எனவேதான், "நாலு தலைமுறைகளாகப் பழி வாங்கியது போதும்; இனியேனும் ஜாதி அடிப்படையில் இல்லாது, பொருளாதார அடிப்படையில் முன்னுரிமை" என்ற கோரிக்கை நியாயமானதாக இருக்கும்.

● வைகை வளவன், மதுரை - 17.

? "நான் ஆட்சிக்கு வந்தால் ரேஷன் கடைப் பொருட்களெல்லாம் உங்கள் வீடு தேடி வரும்" என்று விஜய்காந்த் வாக்குறுதி தந்துள்ளாரே? நடைமுறை சாத்தியமா?

! என்ன விலைக்கு என்று சொல்லவில்லை அல்லவா! அந்த மட்டும் கெட்டிக்காரர்தான்!

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33.

? எதிர்கால இந்தியா எப்படி இருக்கும்?

! புத்தாண்டில் இதுவரை நடந்துள்ள பல படுகொலைகள், பயங்கரவாதிகளின் தாக்குதல்கள், பாலியல் பலாத்காரம்... இவற்றை நோக்க, எதிர்கால இந்தியா, தொழில்நுட்பம்/ பொருளதாரத்தில் உச்சத்துக்கு முன்னேறி, மனித நேயம்/ நேர்மையில் பாதாளத்தில் கிடக்குமோ என்று மனக் கலக்கம் ஏற்படுகிறது.



● இடிப்பும்...



●... தொடுப்பும்!

● அ. பேச்சியப்பன்,
ராஜபாளையம்.

? சேரன் இயக்கிய முதல் படமாக 'தவமாய்த் தவமிருந்து' அமைந்திருந்தால் இவ்வளவு நாள் தியேட்டரில் ஓடியிராது என்கிறான் என் நண்பன்...?

! சரியல்ல! பத்திரிகைகள், ரசிகர்களின் ஏகோபித்த பாராட்டைப் பெற்றுள்ள இப்படம், சேரனின் முதல் படமாக இருந்தாலும் ஓடியிருக்கும் - புதிய இயக்குனர்/ நடிகரின் சாதனை என்கிற முறையில் மேலும் சிறப்புப் பெற்றிருக்கும்.

● எம். சிவகுருநாதன், தஞ்சை.

? ரயில்வே அமைச்சர் லல்லு பயணம் செய்த ரயில் மூன்று மணி நேரம் தாமதமானதற்காக கிழக்கு - மத்திய ரயில்வே தலைமைப் போக்குவரத்து கட்டுப்பாடு அதிகாரி, சரக்கு ரயில் என்ஜின் டிரைவர் ஆகியோர் இடைக்கால பணி நீக்கம் செய்யப்பட்டிருப்பது பற்றி...?

! ஒரு பக்கம் டிரைவர் - டி.டி.ஆருக்கு ஆயிரக்கணக்கில் டிப்ஸ்; இன்னொரு பக்கம் இப்படி தடாலடி நடவடிக்கை. இது டிபிகல் லல்லு ஸ்டைல் ஜிகினா அரசியல். அமைச்சர் பயணம் செய்யாத ஆயிரம் ரயில்கள் ஆண்டுதோறும் தாமதமாகச் செல்கின்றனவே... அதற்கு என்ன செய்ய...? நிர்வாகத்தைச் சீர்திருத்தி முடுக்கிவிடுவதல்லவா அமைச்சரின் பணி. ○

▢ ரூ 100 பரிசு பெறுபவர்:
ஆர். வஸந்தா,
7/13, ஃப்ளாட் எண் 3,
ஜெத் நகர் மூன்றாவது குறுக்குத் தெரு,
சென்னை 600 028

★ ரூ 50 பரிசு பெறுபவர்:
ஆர். நாகராஜன்,
பிளாட் எண்: 111,
சுபம் நகர் மூன்றாவது கட்டம்,
பழைய பல்லாவரம்,
சென்னை 600 117

# "கூட்டணி ஆட்சிக்கு

**சூறாவளி வேகத்தில் தமிழகத்தைச் சக்கரமாகச் சுற்றி வந்து கொண்டிருக்கிறார் ஸ்டாலின். சென்னையில் இருக்கும்போது கட்சிக்காரர்கள் சந்திப்பு, முரசொலி அறக்கட்டளைப் பணிகள். "234 தொகுதிகளில் 154-ல் செயல்வீரர்கள் கூட்டம் நடத்திவிட்டோம்" என்கிறார். அவருடைய பிஸியான ஷெட்யூலில் ஒரு மணி நேரத்தைச் சமீபத்தில் நாம் எடுத்துக்கொண்டோம்.**

**1996 சட்டமன்ற தேர்தலில் ஜெயலலிதாவை மிக மோசமான முறையில் தோற்கடித்த மக்கள், 2001-ல் அவருக்கு மீண்டும் வாய்ப்புக் கொடுத்தார்கள். இந்த நிலையில் இப்போது 2006 தேர்தலும் வந்துவிட்டது. ஐந்து வருடங்களுக்கு ஒருமுறை ஆட்சி மாற்றம் வேண்டும் என்ற எண்ண ஓட்டத்துக்கு மக்கள் வந்திருப்பதாகக் கருதுகிறீர்களா?**

**ஸ்டாலின்:** 1991-96ல் ஆட்சி செய்த ஜெயலலிதா மக்கள் வரிப்பணத்தை வீணடித்து, ஊழலில் மூழ்கி, ஆணவ தர்பாரை நடத்தியதால் மக்கள் அவரை மிகக் கேவலமான முறையில் தோற்கடித்தார்கள். ஆனால் 1996 - 2001-ல் கலைஞர் தலைமையிலான தி.மு.க அரசு, பல சிறப்பான திட்டங்களைத் தீட்டி மக்களுக்கான ஆட்சியாக விளங்கியது. 2001-ல் நாங்கள் தோற்றதற்கும் 1996-ல் ஜெயலலிதா தோற்றதற்கும் வித்தியாசம் இருக்கிறது. 1996-ல் ஜெயலலிதா உட்பட அ.இ.அ.தி.மு.க அமைச்சர்கள் பிரசாரத்துக்குச் சென்றபோது கடுமையான மக்கள் எதிர்ப்பைச் சந்தித்தார்கள். பல தொகுதிகளில் அவர்களால் பிரசாரம் செய்யவே முடியவில்லை. ஆனால் 2001-ல் எங்களுக்கு மக்களிடையே எந்தவிதமான எதிர்ப்பும் இல்லை; சலசலப்பும் இல்லை. 'ஜெயலலிதா மீண்டும் தவறு செய்ய மாட்டார். செய்த தவறுகளுக்காக பெற்ற தண்டனையைப் பாடமாக எடுத்துக்கொண்டிருப்பார்' என்று மக்கள் 2001-ல் நம்பினார்கள். அவருடன் அப்போது கூட்டுச் சேர்ந்த கட்சிகளும் நினைத்தன. இப்படி மக்கள் எதிர்பார்ப்புடன் கூடிய, கூட்டணிக் கணக்கின் அடிப்படையில்தான் 2001-ல் ஜெயலலிதா வென்றார். ஆனால் மக்களின் எதிர்பார்ப்பும் நம்பிக்கையும் ஜெ. ஆட்சிக்கு வந்த சில மாதங்களில் பொய்த்துவிட்டது. தமிழகத்தில், பாராளுமன்ற தேர்தலில் புதிய கூட்டணி அமைந்தது. ஜெ.க்கு மீண்டும் பாடம் புகட்டும் அளவில் நாற்பது தொகுதிகளிலும் மக்கள் அவரைத் தோற்கடித்தார்கள். ஆனால் ஜெயலலிதாவின் ஆணவம், பழி வாங்கும் அரசியல், ஊழல் என்பது தொடர்கதையாகி வருகிறது. வரும் சட்டமன்ற தேர்தலில் 1996ஐ விட மிக மோசமான முறையில் ஜெ. தோற்கடிக்கப்படுவார் என்பது உறுதி. இந்த அரசியல் நிலவரம் ஒருபக்கம் இருக்க, 'ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை ஆட்சி மாற்றம் இருந்தால் நன்றாக இருக்குமே' என்று மக்கள் கருதுகிறார்கள் என்பதும் பரவலாக இருக்கக்கூடிய உண்மை. எனவே இந்த அடிப்படையில் பார்த்தாலும் ஜெயலலிதா ஆட்சியை இழப்பார் என்பது நிச்சயம்.

**பாராளுமன்ற தேர்தலுக்கு முன்னால் செய்த சில தவறுகளைத்**

## –ஸ்டாலின் திட்டவட்டம்

# வாய்ப்பே இல்லை!”

திருத்திக் கொண்டதாலும், மக்களில் பல தரப்பினருக்கு இலவச சலுகைகள் என்று அள்ளி விடுவதாலும், இழந்த செல்வாக்கை ஜெ. மீண்டும் பெற்று வருவதாக ஒரு பேச்சு நிலவுகிறதே!

**ஸ்டாலின்:** சரிந்த செல்வாக்கை மீண்டும் ஜெயலலிதா பெற்று வருகிறார் என்பது பத்திரிகைகள் திட்டமிட்டு பரப்பும் செய்தியே தவிர, உண்மை நிலை அல்ல.

தி.மு.க ஆட்சியில் கொண்டு வரப்பட்ட நல்ல திட்டங்களை ரத்து செய்த ஜெயலலிதா, பாராளுமன்ற தேர்தல் படுதோல்விக்குப் பிறகு, ரத்து செய்ததை 'ரத்து' செய்திருக்கிறார். இது வரும் தேர்தல் வெற்றிக்கான நாடகம் என்பதை மக்கள் தெளிவாகவே புரிந்து வைத்திருக்கிறார்கள். சரியான துக்ளக் ஆட்சி நடத்துவதாகத் தான் மக்கள் நினைக்கிறார்கள். விவசாயிகளுக்கு இலவச மின்சாரத்தை முதலில் ரத்து செய்த ஜெ. மீண்டும் வழங்குவதாக அறிவித்தார். ஆனால் அது



முழுமையாக நிறைவேற்றப்படவில்லை. சுனாமி நிவாரணமாக மத்திய அரசு கொடுத்த 1280 கோடி ருபாய் முறையாகச் செலவழிக்கப்படவில்லை. விவசாயிகளுக்கு, பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணம் சென்றடையவில்லை. அதில் ஏகப்பட்ட ஊழல். இப்போது மழை, வெள்ள நிவாரணத்துக்கு மத்திய அரசு வழங்கியது 1000 கோடி ரூபாய். இதில் நடக்கும் குளறுபடிகள் எக்கச்சக்கம். இப்படி மத்திய அரசிடம் கோடி, கோடியாக வாங்கிக்கொண்டு பாதிக்கப்பட்ட லட்சக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் சென்றடையாத நிலையில், இழந்த செல்வாக்கு மீண்டும் வருவதாக எப்படிச் சொல்ல முடியும்?

சிறுசேரி என்ற இடத்தில் தொழிற்சாலைகளுக்கு 400 ஏக்கர் நிலம் தி.மு.க ஆட்சியில் கையகப்படுத்தப்பட்டது. அதை சிங்கப்பூர் தனியார் நிறுவனத்துக்கு, வீடுகள் கட்ட அடிமாட்டு விலைக்கு விற்று விட்டார்கள். தி.மு.கதான் இந்த விவகாரத்தை அம்பலமாக்கி நீதிமன்றத்தில் நிறுத்தியிருக்கிறது.

தி.மு.கவால் துவக்கப்பட்ட சுய உதவிக் குழுக்களுக்கு 90 சதம் நிதியுதவி செய்வது மத்திய அரசு. அதற்கு தாம்தான் நிதியுதவி செய்வதாக ஒரு தோற்றத்தை உருவாக்கியிருக்கிறார். சுய உதவிக் குழுக்களை அரசியலுக்குப் பயன்படுத்துகிறார். இதைக் குழுக்களும் உணர்ந்துவிட்டன. இனி இது எடுபடாது.







**போலீஸும் உளவுத்துறையும் கூட்டணியைப் பிளக்க பயன்படுத்தப்படுவதாகக் கலைஞர் கூடச் சொல்லியிருக்கிறாரே! அவ்வளவு பலவீனமானதா உங்கள் கூட்டணி?**

**ஸ்டாலின்:** தங்களுக்கு வேண்டிய போலீஸ் அதிகாரிகளை முக்கியமான பொறுப்புகளில், உளவுத்துறை மற்றும் வேறு இடங்களில் அமர்த்துவது அவர்களுக்கு out - of - turn பதவி உயர்வு கொடுப்பது ஆகியவற்றைச் செய்து வருகிறது ஜெ. அரசு. அதிகாரிகளை அரசியல் ஆதாயத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளும் நோக்கம்தான். அவர்களும் தங்களால் இயன்ற அளவு முயற்சி செய்து பார்த்தார்கள். பலமான கூட்டணி என்பதால் உடைக்க முடியவில்லை. இப்போது அந்த முயற்சிகளைக் கைவிட்டு, விட்டு, 'நாங்கள் பிளவுபட வேண்டும்' என்று யாகம் நடத்துகிறார்கள். கூட்டணியை உடைக்க முயற்சிப்பது, யாகம் நடத்துவது என்று ஈடுபடாமல் நிர்வாகப் பணிகளில் கவனம் செலுத்தியிருந்தால் வெள்ள நிவாரணத்தில் 51 உயிர்களை இழந்திருக்க வேண்டிய துர்பாக்கிய நிலை ஏற்பட்டிருக்காது.

**கூட்டணியைப் பிளக்கும் முயற்சியில் ஜெ. தோற்றுவிட்டதாகச் சொல்கிறீர்கள். ஆனால் கூட்டணிக் கட்சிகளுக்கிடையே தொகுதிப் பங்கீட்டில் பிரச்னை வந்து பிளவு வரும் வாய்ப்பு இல்லை என்கிறீர்களா?**

**ஸ்டாலின்:** ஐக்கிய முற்போக்கு கூட்டணிக் கட்சிகளைப் பொறுத்தமட்டில், ஜெயலலிதா அரசை ஒழிக்க வேண்டும் என்பதுதான் முக்கியம். எனவே சீட்டு பங்கீடு குறித்து எந்தவிதமான பெரிய பிரச்னையும் - பிளவுபடும் அளவுக்கு - ஏற்பட துளியும் வாய்ப்பில்லை!

(மறுபடியும் 'கூட்டணி' என்று அடுத்த கேள்வியைத் துவங்கியதும், "கூட்டணியை உடைக்கும் நோக்கத்

தையுடைய கேள்விகளுடன் வந்திருக்கிறீர்கள் போலிருக்கிறதே!" என்று சிரிக்கிறார்)

**'தேர்தலுக்குப் பிறகு கூட்டணி ஆட்சிதான் அமைக்கப்பட வேண்டும், அதில் காங்கிரஸுக்கும் பங்கு கொடுக்க வேண்டும்' என்று காங்கிரஸ் தரப்பில் குரல்கள் எழுந்துள்ளதே!**

ஸ்டாலின்: தமிழ்நாட்டின் வரலாற்றில் இதுவரை கூட்டணி அரசு ஏற்பட்டதில்லை. இனியும் கூட்டணி அரசு வர வாய்ப்பில்லை.

**தி.மு.க, அ.இ.அ.தி.மு.க போன்ற கட்சிகள் கூட்டணி சவாரி செய்யாமல் எங்களைப் போல 234 தொகுதிகளிலும், தனித் தனியாக நிற்க முடியுமா என்று சவால் விடுகிறாரே விஜயகாந்த்?**

ஸ்டாலின்: அவர் நிற்கட்டும்; அது அவரது உரிமை. அதை வரவேற்கிறோம்.

**"42 பேர் வெள்ள நிவாரண நெரிசலில் சிக்கி இறந்ததற்கு ஜெ. ராஜினாமா செய்ய வேண்டும்" என்று சொல்கிறீர்கள். ஆனால் மாஞ்சோலை தோட்டத் தொழிலாளர்கள் போலீஸ் அடக்குமுறையில் தாமிரபரணியில் மூழ்கி இறந்தபோதும், கோயமுத்தூர் குண்டு வெடிப்பு நடந்தபோதும் தி.மு.க அரசு தார்மீகப் பொறுப்பேற்று ராஜினாமா செய்யவில்லையே என்று அ.இ.அ.தி.மு.க தரப்பில் பதிலடி கொடுக்கப்படுகிறதே!**

ஸ்டாலின்: தி.மு.க ஆட்சியில் நடந்ததாக நீங்கள் சொல்லும் விஷயங்களோடு வெள்ள நிவாரண நெரிசல் மரணங்களை ஒப்பிடக்கூடாது. அவை எதிர்பாராமல் நடந்தவை. இப்போது மாவட்ட ஆட்சித் தலைவரை மாற்றுகிறார்கள்; போலீஸ் துணை கமிஷனரை மாற்றுகிறார்கள். விசாரணை கமிஷன் போடுகிறார்கள். அதே நேரத்தில் அரசியல் பழிவாங்கும் நோக்கத்துடன் எங்கள் கவுன்ஸிலரைக் கைது செய்கிறார்கள். கோர்ட்டு ஜாமீன் கொடுத்தும் அதை ரத்து செய்ய முயற்சி செய்கிறார்கள். குண்டர் சட்டத்தில் உள்ளே தள்ளுகிறார்கள். இது அப்பட்டமான திசை திருப்பும் முயற்சி. கவுன்ஸிலர் தனசேகரனை ஜாமீனில் விடக்

கூடாது என்று அவசரம் காட்டிய அ.இ.அ.தி.மு.க அரசு, ராமச்சந்திரா கல்லூரி விவகாரத்தில் அவசரம் காட்டி அப்பீல் செய்யாததன் ரகசியம் எல்லோருக்கும் தெரிந்ததுதானே!

**உங்கள் மீது வழக்குகள் போட்டு முடக்க முயற்சி நடப்பதாகக் கருதுகிறீர்களா?**

**ஸ்டாலின்:** மேம்பால ஊழல் என்று வழக்குப் போட்டார்கள். நான்கு வருடமாயிற்று. இதுவரை குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யவில்லை. ராணி மேரி கல்லூரியில் அத்துமீறி நுழைந்தது, அதற்காக கைது செய்ய வந்தபோது போலீஸைத் தாக்கியது என்று வழக்குகள் போட்டிருக்கிறார்கள். கற்புக்கரசி கண்ணகி சிலை விஷயமாக நான் மேடையில் பேசியதற்கும் வழக்கு. எத்தனை வழக்கு வேண்டுமானாலும் போடட்டும். எதையும் சந்திக்கத் தயாராக இருக்கிறேன்.

**வைகோவைப் பற்றிய உங்கள் கண்ணோட்டம்தான் என்ன? ஏதோ இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்க்கக்கூட மாட்டார்கள் என்ற அளவுக்குச் சித்திரிக்கப்படுகிறதே!**

**ஸ்டாலின்:** சில பேர், சில ஆதாயங்களுக்காக அப்படி இட்டமிட்ட பிரசாரத்தில் இறங்கி வருகிறார்கள். அவசியத்துக்கேற்றபடி நாங்கள் கலந்து பேசிக் கொண்டுதான் இருக்கிறோம்.

**சமீபகாலமாக தயாநிதி மாறனுக்கு தி.மு.கவில் அதிக முக்கியத்துவம் கொடுப்பதாகச் சொல்லப்படுகிறதே!**

**ஸ்டாலின்:** எனக்கு முக்கியத்துவம் கொடுப்பதாக 20, 25 வருடம் சொல்லிச் சொல்லி ஓய்ந்து போனார்கள். இப்போது தயாநிதியைப் பற்றிச் சொல்லத் துவங்கியிருக்கிறார்கள். அவ்வளவுதான்.

**- ப்ரியன்**

படம்: **ஸ்ரீஹரி**



# சின்ன ஜோக்; பெரிய பரிசு!

மீண்டும் ஆரம்பிச்சாச்சு.
வாரம் ஒரு ஜோக் போட்டி!
**போட்டி 1**

படகு மறைவு, பீச், சுண்டல், ஸ்ட்ரா என ஓல்டு ஸ்டைல் காதலாக இருந்தாலும் சரி... ஈமெயில், செல்போன், காபி ஷாப் என லேட்டஸ்ட் லவ்ஸாக இருந்தாலும் சரி, ரசிச்சு சிரிக்கிற மாதிரி 'காதலர்கள்' ஜோக்ஸ் எழுதி அனுப்புங்க... தேர்வாகும் ஜோக்குகளுக்கு சன்மானம் உண்டு.

பளீர் ஜோக்குக்கு

**தூத்துக்குடி மெட்டல்ஸ், சென்னை - 19**

வெள்ளி விழா ஆண்டில் வழங்கும்

**'ப்ரீத்தி' மிக்ஸி பரிசு!**

- 'காதலர்கள் ஜோக்ஸ்'னு குறிப்பிட்டு அஞ்சலட்டையில் மட்டுமே எழுதணும்.
- ஒரு அட்டையில் ஒரு ஜோக் மட்டுமே எழுதவும்.
- ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- கடைசித் தேதி : 18.1.2006

## இரண்டாவது பசுமைப் புரட்சி!

"மீண்டும் ஒரு பசுமைப் புரட்சி நிகழ்த்துவோம், வாருங்கள்!" என்று பிரதமர் விஞ்ஞானிகளை நோக்கி அறைகூவல் விடுத்திருக்கிறார். விவசாயிகள், கிராமப்புறங்களை நோக்கி அரசின் கவனம் மறுபடி திரும்பியிருப்பது மகிழ்ச்சி அளிப்பதாக உள்ளது.

முதல் பசுமைப்புரட்சியின் விளைவாக இந்தியாவின் உணவு தானியப் பற்றாக்குறை நீங்கியதுடன் இப்போது உபரி உற்பத்தியே ஆகிக் கொண்டிருக்கிறது. விளைச்சலை நல்ல விலைக்கு விற்க முடியாமல் விவசாயிகள் மீண்டும் அரசாங்கத்தையே எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது அரசும், விவசாய விளை பொருட்களுக்கு மானியம், ஆதரவு விலை, என அளிப்பதோடு மொத்த கொள்முதல் செய்தும் விவசாயிகளுக்கு உதவி வருகிறது.

இந்நிலையில் மீண்டும் ஒரு பசுமைப் புரட்சி நிகழ்ந்தால் உற்பத்தி இன்னும் அதிகரித்து, உபரி உணவு தானிய புழக்கம்தானே அதிகரிக்கும் என்று நமக்குச் சந்தேகம் எழுகிறது.

ஆனால், பிரதமர் இரண்டாம் பசுமைப் புரட்சியில் வறண்ட நிலங்களில் உற்பத்தி பெருக்குவதே இலக்காக இருக்கும் என்கிறார்.

'வானம் பார்த்த பூமியான வறண்ட நிலங்களில் உழைக்கும் விவசாயிகள், முதல் பசுமைப் புரட்சியினால் பயனடையவில்லை; நவீன பாசன முறைகள், புதிய விவசாய தொழில்நுட்பம் போன்றவற்றை விஞ்ஞானிகள் இந்த விவசாயிகளின் தேவைக்கேற்ப பக்குவப்படுத்திக் கொடுத்தால், அவர்கள் வறுமையின் பிடியிலிருந்து



கல்கி



2006 ஜனவரி 15
பார்த்திப தை 2
மலர் : 64
இதழ் : 24

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




விடுபட்டு உயர்வார்கள்' என்பது பிரதமரின் எதிர்பார்ப்பு.

சிறு விவசாயிகளிடையே தொழில்நுட்ப அறிமுகத்தால் உற்பத்திப் பெருக்கம் ஏற்படும் என்பதில் சந்தேகம் இல்லை. அதற்கான முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும் என்பதிலும் மாற்றுக் கருத்து இல்லை.

ஆனால், இரண்டாவது பசுமைப் புரட்சியின் விளைவாக, விளைச்சல் அதிகரித்து, உணவுப் பொருள்கள் அல்லது காய்/பழ வகைகளின் புழக்கம் அதிகமானால் மீண்டும் பிரச்னையே ஆரம்பிக்கும். உவர்நில சாகுபடி பயிர்களையும் சொட்டு நீர்ப் பாசன முறையில் விளையும் காய்-கனி வகைகளையும் உடனடியாக விற்காவிட்டால் பெரு நஷ்டம் ஏற்படும். ஏற்கெனவே உள்நாட்டில் விளைந்துவரும் கனி, காய் வகைகளுக்குப் போட்டியாக, ஏராளமான கனிகள், காய்கறிகள் இறக்குமதியாகி விற்பனையில் சக்கை போடு போட்டுக் கொண்டிருக்கின்றன. காஷ்மீரத்து ஆப்பிள்களுக்குப் போட்டியாக இங்கிலாந்து / ஐரோப்பிய நாட்டு ஆப்பிள்கள் வந்துவிட்டன. ஹைதராபாத் திராட்சையை அளவிலும் சுவையிலும் தோற்கடிக்கும் ஆஸ்திரேலிய திராட்சை நகர்ப்புறங்களில் சுறுசுறுப்பாக விற்கிறது. நாக்பூர் ஆரஞ்சுகள், கலிஃபோர்னிய ஆரஞ்சுகளுக்கு வழிவிட்டாக வேண்டியிருக்கிறது.

உற்பத்தியைப் பெருக்கிக் கொள்ளும் இந்திய விவசாயிக்கு இந்த அயல்நாட்டுச் சரக்குகளுடன் போட்டி போடுவது மிகவும் கஷ்டம்.

அரசே அத்தனை விளை பொருளையும் வாங்கிக் கொள்ள முடியாது. விவசாயிகளுக்கு ஏற்படும் நஷ்டத்தை ஈடு செய்ய மானியம் அளிக்கவும் முடியாது. அது ஆரோக்கியமான பொருளாதார நடைமுறையாக இராது என்பதுடன் விவசாய உற்பத்திப் பொருள்கள் சீக்கிரமே வீணாகக் கூடியவை என்பதால், காலதாமதமின்றி வியாபாரம் ஆக வேண்டும் என்பதையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

ஆகவே, உற்பத்தியைப் பெருக்கி விவசாயிகளுக்கு ஆண்டு முழுவதும் வேலையும் வருமானமும் தர விரும்பும் அரசு, அதன் தொடர்விளைவுகள் பற்றியும் சிந்திப்பது அவசியம். இரண்டாம் பசுமைப் புரட்சியில் உணவுப் பொருள் பதப்படுத்தும் அல்லது உருமாற்றி பக்குவப் படுத்தும் தொழில்களையும் இணைக்க வேண்டும். இத்தகைய தொழில்களைக் கிராமப்




புறங்களில் தொடங்கி, உற்பத்தியாகும் விவசாய விளைபொருட்கள் வீணாவதைத் தடுக்கலாம். இதன் மூலம் கிராமப் பகுதிகளில் வேலை வாய்ப்புகள் பெருகும்; கிராம பொருளாதாரம் வளம் பெறும். ஆனால், அதற்கு முன் கிராமப் புறங்களில் அடிப்படை வசதிகள் பெருக்க வழி செய்ய வேண்டும்.

விவசாய விளை பொருள்களும் சரி, பதப்படுத்திய அல்லது உருமாறிய உணவுப் பண்டங்களும் சரி... உலகத் தரத்தினதாக அமைய வேண்டும். இல்லாவிட்டால், தற்போது இங்கே இறக்குமதி செய்யப்பட்டு பேராதரவு பெற்று வரும் பழங்கள் / பண்டங்களோடு போட்டி போட முடியாது.

கெல்லாக்ஸின் கார்ன்ஃப்ளேக்ஸும் பெப்ஸியின் உருளை வறுவலும் உலகெங்கும் சந்தைகளைப் பிடித்து, இந்தியாவிலும் காலூன்றிவிட்டன. இவை போன்று வேரூன்றிய உற்பத்திப் பொருட்களுடன் போட்டி போட வேண்டுமானால், தரமான உற்பத்தியும் நூதனமான மார்க்கெடிங் அணுகுமுறையும் அவசியமாகின்றன.

உலக வர்த்தக ஒப்பந்த உச்சிமாநாட்டில் நமது அரசுப் பிரதிநிதி மிகவும் போராடி, முன்னேறிய நாடுகள் தங்கள் விவசாய உற்பத்திப் பொருட்களை ஏற்றுமதி செய்ய அளித்துவரும் மானியத்தைப் படிப்படியாக நீக்குவதற்குச் சம்மதம் பெற்றுள்ளார்.

இதன் விளைவாக, இன்னும் சில ஆண்டுகளில் இந்தியா, சர்வதேச சந்தைக்கு விவசாய உற்பத்திப் பொருட்களை எடுத்துச் செல்வது ஓரளவு இலகுவாக்கப்பட்டிருக்கிறது.

இதே நேரத்தில் இங்கு இரண்டாவது பசுமைப் புரட்சி குறித்து பிரதமர் தமது சிந்தனைகளை வெளிப்படுத்தியிருப்பது மிகவும் பொருத்தமே.

இரண்டாவது பசுமைப் புரட்சிக்கு மன்மோகன் சிங் அரசு தொடக்கவிழா நடத்தட்டும். ஆனால், ஒரு முறைக்கு இரு முறையாகத் தொடர்விளைவுகள் பற்றி யோசித்து, தீர்க்கதரிசனத்துடன் திட்டமிட்டு அதனைச் செயல்படுத்தட்டும்.

இல்லாதுபோனால், எந்த விவசாயிக்கு உதவ திட்டம் போடப்படுகிறதோ, அவர்களுக்கே பெரும் துயரமாக முடியும். ●

# சேனல்



சன் டி.வியில் படம் விற்பவர்களுக்கு விமர்சனம், டாப் டென், சன் மியூசிக் ஸ்பெஷல் போன்ற நிகழ்ச்சிகளில் கூடுதல் முக்கியத்துவம் அளிப்பதாகத் தெரிகிறது. (காட் 'பாதர்')

வருடத்தில் பாதி நாட்கள் அமெரிக்காவிலுள்ள தன் மகள் வீட்டிலிருக்கிறார் விசு. (டர்க்கி டவல் கொண்டு போவாரா?)

ஜெயா டி.வியின் பிரதான தொகுப்பாளரான உஷா பி.ஈ. இறுதி வருடம் படிக்கிறார். முடிக்கும் முன்பு ஒரு பன்னாட்டு நிறுவனத்தில் கைநிறைய சம்பளத்தில் வேலை கிடைத்திருக்கிறதாம். ('உஷார்'தான்!)

குறளரசன் பெயரில் தொலைக்காட்சியில் நிகழ்ச்சிகள் வழங்க திட்டமிட்டுள்ளார், டி.ராஜேந்தர். (சிம்பு நடிப்பாரா?)

காரைக்காலில் சுனாமியால் பாதிக்கப்பட்டவர்களுக்கு ஏ.ஆர். ரஹ்மான் இசை நிகழ்ச்சி நடத்தியதை சுனாமி தினமான டிசம்பர் 26-ம் தேதி ஒளிபரப்பியது என்.டி.டி.வி. வித்தியாசமான இந்நிகழ்ச்சியைக் கண்டும் காணாமல் விட்ட தமிழ் சேனல்களுக்கு ஒரு குட்டு. என்.டி. டி.விக்கு ஒரு ஷொட்டு.

பா.ம.க. ஆதரவான 'தமிழன்' தொலைக்காட்சி சென்னையின் பல பகுதிகளில் தெரிவதில்லை. எஸ்.சி.வி.யின் கட்டுப்பாட்டிலுள்ள கேபிள் சந்தாதாரர்களுக்குத்தான் இந்த தொந்தரவுகள் எழுவதாக புகார். (பாவம் 'தமிழன்')

- பப்பி

படம் : ஸ்ரீஹரி

## உஷார் உஷா!

# New Year Special



NEW SERIAL

CALENDAR 2006



COUNTDOWN



POTTER UPDATES

January 2006

# GOKULAM

THE Magazine for Children

For Subscriptions mail to :Gokulam, Kalki Buildings,
47- NP, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai-600 032
E-mail:subscription@kalkiweekly.com

# திடீர் தலைவர்!



சர்ச்சைகளில் சிக்காதவர் - கண்டிப்பான மனிதர் - சிறந்த நிர்வாகி - ஆர்.எஸ்.எஸ்ஸின் செல்லப்பிள்ளை - பாரதிய ஜனதாக் கட்சியின் புதிய தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ராஜ்நாத்சிங்கின் முக்கிய அடையாளங்கள் இவை.

இளம் பருவத்திலேயே ஆர்.எஸ்.எஸ். கொள்கைகள் மீது தீவிர நாட்டம். அதன் காரணமாக அகில பாரதிய வித்யார்த்தி பரிஷத்தின் (ஏபிவிபி) தீவிர செயல் வீரராக மாறினார். உ.பி. மாநிலம் மிர்ஸாபூரில் இருக்கும் முதுகலைக் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றிய இவரை, தீவிர அரசியலுக்குள் இழுத்து வந்தது இந்திரா காந்தியின் எமர்ஜென்சிதான்.

1977-ல் முதன்முறையாக எம்.எல்.ஏ ஆனபோது இவருக்கு வயது 26!. அதன் பிறகு பா.ஜ.கவின் இளைஞர் பிரிவு உள்ள பல பிரிவுகளிலும் பணியாற்றி, 1988-ல் உ.பி மாநில மேலவை, 1994-ல் நாடாளுமன்ற மேலவை என்று தொடர்ந்து பல உயர் பொறுப்புகள் இவருக்குக் கிடைத்தன.

இடையில் 1991-ல் உ.பி மாநில கல்வி அமைச்சராக இருந்தபோது சங்பரிவார் தலைவர்களான கேஷவ் பல்ராம் ஹெட்கேவர், தீன்தயாள் உபாத்யாய போன்றோரின் வரலாறுகளை, பாடத்திட்டத்தில் கொண்டுவந்ததுதான் இவரை ஆர்.எஸ்.எஸ்ஸின் செல்லப் பிள்ளையாக்கின.

உ.பி மாநிலத்தின் பா.ஜ.க தலைவராக 1997-ல் நியமிக்கப்பட்ட இவர் 2000-ஆம் ஆண்டில் உ.பி மாநில முதல்வரானார்... நாட்டின் இளம் முதல்வர்களுள் இவரும் ஒருவர்.

சத்தீஷ்கர் மாநிலப் பொறுப்பாளராக இருந்து தேர்தலில் காங்கிரசின் அஜீத் ஜோகியை வீட்டுக்கு அனுப்பியது - 'முடியவே முடியாது' என்று வர்ணிக்கப்பட்ட ஜார்கண்ட் வெற்றியை பா.ஜ.க வசமாக்கியது ஆகியவை இவரது சாதனைகள்...

வாஜ்பாய் அமைச்சரவையில் தரைவழிப் போக்குவரத்துத் துறையில் பணியாற்றி, இப்போது தேசியத் தலைவராகி இருக்கும் ராஜ்நாத் சிங்கின் முன் மூன்று முக்கிய சவால்கள் உள்ளன.

- உட்கட்சி ஜனநாயகத்தை மீட்டெடுப்பது
- சிதறிப்போன இமேஜை சீர்படுத்துவது
- சங்பரிவார்கள் நிர்பந்தங்களை எதிர்கொள்வது...

சவால்களை எதிர்கொள்வாரா இந்த திடீர் தலைவர்?

\- முராரி

# அம்மாவுடன் ஆசீர்வாதம்!

அப்போது எனக்கு நாலைந்து வயது இருக்கலாம். என் தாயாருடன் கீழ்ப்பாக்கம் கல்கி தோட்டத்தில் மாமா, அம்மாவைப் பார்க்க வந்தது நினைவில் இருக்கிறது. மாமா, அம்மா இருவரும் என் தாயாரின் தேவைக்குப் பொருளா தார உதவி செய்வார்கள். நான் நல்ல குண்டாக இருந்தாலும் மாமா அம்மா இருவரும் என்னைத் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சியது எனக்கு இப் போதும் ஞாபகம் வருகிறது.

பன்னிரண்டு வயது நிறைந்து சில மாதங்களில் எஸ்.எஸ்.எல்.சி. முடித்துவிட்டு மேல் படிப்புக்காகச் சென்னை வந்தபோது என் தாயாரு டன் மாமா, அம்மாவைப் பார்க்கப் போனேன். "என் மருமானை அனுப்பு கிறேன், அவனுக்கு ஒரு சீட் கொடுத்து விடுங்கோ" என்று பச்சையப்பன் கல்லூரி முதல்வர் கிருஷ்ணமூர்த்தி யிடம் மாமா டெலிபோனில் பேசியது இன்றும் பசுமையாக ஞாபகம் இருக் கிறது. ஆனால் எனக்கு கல்லூரியில் படிக்கும் பாக்கியம் அப்போது இல்லை. குடும்ப பொருளாதார நிலை என்னைப் பழிவாங்கி விட்டது. உண்மையை மாமா, அம்மாவிடம் சொல்லத் தயக்கம், பயம்! காலம் ஓட ஆரம்பித்தது. இரண்டு வருடங்கள் வீண்.

என் தகப்பனார் இறந்து போன வுடன் மாமாவிடம் வேலை தேடிப் போனேன். நான் காலேஜில் படிக் கிறேன் என்ற எண்ணத்தில் இருந்த மாமா, அதிர்ந்து போய் கோபப்பட்டுக் கத்தினார். அதனால் நல்லதே நடந்தது. எனக்கு 'கல்கி' அலுவலகத்தில் வேலை கிடைத்தது. அது என் வாழ்நாளில் நல்ல திருப்பு முனையாகவும் அமைந்தது.

நான் காலேஜில் சேர்ந்து படிக்கவில் லையே என்று என்னைவிட அம்மாவுக்குத்தான் வருத்

**வி. முரளி**

* முரளி-ஜனனி தம்பதியுடன் எம்.எஸ்.





தம் அதிகம். ‘ஏண்டா, இப்படிப் பண்ணினே, இங்கேயே ஆத்தில் இருந்து காலேஜ் போயிருக்கலாமே. மாமாவிடம் ஏன் சொல்லாமலிருந்தாய்?’ என்று பலமுறை என்னைக் கேட்டதுண்டு.

கல்கி ஆபீசிலேயே மாமா வேலை போட்டுக் கொடுத்துவிட்டார் என்று தெரிந்தவுடன் என்னைவிட, என் தாயாரை விட அம்மாவுக்குத்தான் ஆனந்தம் அதிகம்.

அம்மா, மாமாவுடைய தனிப்பட்ட வங்கி கணக்குகள், கச்சேரிக் கணக்குகள் முதலியவற்றை எழுதி, சரிவர வைத்துக் கொள்ளும் பொறுப்பை எனக்கு மாமா கொடுத்தார். அந்தச் சமயங்களில் ரயில் டிக்கெட் வாங்குவதற்கோ, பக்க வாத்தியக்காரர்களுக்குக் கொடுப்பதற்கோ அம்மாவிடம் செக் கையெழுத்து வாங்கப் போகும்போது, எதுவுமே என்னிடம் கேட்க மாட்டார்.

அம்மா பாட்டு போலவே அம்மாவின் கையெழுத்தும் முத்து முத்தாக இருக்கும். நானாக ‘இந்த செக் இந்தக் காரியத்துக்காக வாங்குகிறேன்’ என்று சொல்லுவேன். ‘எவ்வளவு ரூபாய் என்று பார்த்துக் கையெழுத்து போட்டீங்களா?’ என்று கேட்பேன். எல்லா



## எங்கள் எம்.எஸ்.

வற்றுக்கும் 'போடா' என்ற ஒரு பதில்தான்.

**நா**ன் வேலைக்குப் போக ஆரம்பித்தபோது வயது பதினாறு. உடனேயே என் அடுத்த அக்கா தொலைபேசி அலுவலகத்தில் வேலைக்குச் சேர்ந்தாள். மாமா, அம்மாவைப் பார்த்து ஆசீர்வாதம் வாங்கிக் கொண்டபோது, 'நீ வேலைக்குப் போகப் போறே, காது, மூக்கு மூளியாக இருக்கக் கூடாது' என்று அம்மா சொல்லி தாம் போட்டுக் கொண்டிருந்த பவழத்தோடு, மூக்குத்தி, செயின், வளையல் எல்லாவற்றையும் கழற்றிக் கொடுத்துவிட்டாள்.

**தி**டீரென்று ஒரு நாள் 'ராஜாஜி உன்னைப் பார்க்க வேண்டும் என்று சொல்கிறார்' என்று மாமா என்னிடம் சொன்னபோது எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. என்ன செய்வது என்று தெரியாமல் அன்று பிற்பகல் ராஜாஜியின் கல்கி காரியாலய குடிலில் அவரைப் பார்த்தேன். மொத்தமே இரண்டு கேள்விகள்தான்.

உன் பெயர் என்ன?

முரளி

என்ன படித்திருக்கிறாய்?

சில துளி நேரம் மௌனம்.

உன்னைத் தான் என்ன படித்திருக்கிறாய்

வெறும் எஸ்.எஸ்.எல்.சி. தான் சார்.

அதற்கு ஏன் வெட்கப்படுகிறாய். நான் உனக்கு யூனிவர்சிடி எஜுகேஷன் கொடுக்கிறேன் என்றார் அந்தப் பெரியவர்.

அதன் பிறகு தான் நான் என்ன வேலை செய்ய வேண்டும் என்று தெரிந்தது.

அந்த மகா பெரியவரின் அன்பும், பிரியமும் எனக்கு வாழ்க்கையில் அன்று கிடைக்காத கல்லூரிப் படிப்பை எல்லாம் கொடுத்தது.

இந்த உரையாடலை மாமாவிடம் சொன்னேன். அவர் என்னையும் அழைத்துக்கொண்டு மாடிக்கு வந்து அம்மாவிடம் சொல்லச் சொல்லி இருவரும் கேட்டு சந்தோஷப்பட்டார்கள். அம்மாவுக்கு, நான் காலேஜ் படிப்பு முடித்துவிட்டு வந்த பெருமை, ஆனந்தம்.

**ரா**ஜாஜியின் அன்பு, ஆசி, மாமா அம்மாவின் பிரியம் இவை எல்லாம் நான் வாழ்க்கையில் வேகமாக முன்னேறி வர ஒரு பெரிய சக்தியாக இருந்தன. இன்று பல்கலைக் கழகங்களில் விரிவுரை ஆற்றும்போது இந்த மூவரையும் நினைத்து ஆனந்தக் கண்ணீர் சிந்துகிறேன். எல்லாம் அம்மா ஆசீர்வாதம்.




**க**ல்கி பத்திரிகை வெளிவருவது தடைப்பட்ட இடைக் காலத்தில் மாமாவும் அம்மாவும் பெரிய அரண்மனை போலிருந்த வீட்டிலிருந்து வாடகை வீட்டுக்கு வந்தார்கள். ராமனுக்கும் சீதைக்கும் அயோத்தியானாலும் தண்டகாரண்யமானாலும் ஒன்றாகத் தான் இருந்தது. அதே போலத்தான் மாமாவுக்கும் அம்மாவுக்கும் வாடகை வீடு இருந்தது. இருவர் மனத்திலும், எண்ணத்திலும், பேச்சிலும், சிரிப்பிலும், ஹாஸ்யத்திலும் துளிக்கூட மாறுதல் இல்லை. கல்கி மாளிகை போல் இங்கும் விருந்தினர்கள், நண்பர்கள், சங்கீதக்

காரர்கள், தொழிலதிபர்கள் என்று வருவோர் போவோருடன் கலகலப்பாகத் தான் இருந்தது. வீட்டு வாசலில் பஸ், ஆட்டோ போக்குவரத்தோ, வள்ளுவர் கோட்டத்தில் அடிக்கடி நடக்கும் மீட்டிங்குகளோ இவர்கள் இருவரையும் துளிக்கூட பாதிக்கவில்லை. இந்த வீட்டுக்குப் பகவான் ஸ்ரீ




சத்யசாயி பாபா வந்திருந்து இருவரையும் ஆசிர்வதித்தது இருவருக்கும் பெரிய பலமாக இருந்தது.

**மா**மாவை விட்டு அம்மாவைப் பிரித்துப் பார்க்க முடியாது. அம்மாவை விட்டு மாமாவைப் பிரிக்க முடியாது. இதே போல் **அவன்** நினைக்கவில்லையே?

மாமா எப்போதுமே கட்டுப்பாட்டுடன் இருந்தவர். வியாதி என்று அவஸ்தைப்பட்டு எனக்குத் தெரியாது. அவரைப் போல் சுசி ருசியாகச் சாப்பிடுபவர்களைப் பார்ப்பது கஷ்டம். அதேபோல் மனத்தில் ஏதாவது சங்கல்பம் செய்து கொண்டு அது சித்தியாகும் வரை பல நாட்கள் பட்டினி இருப்பவரையும் பார்க்க முடியாது. கடைசி வரை அப்படியே. சில தினங்கள் மட்டும் ஆஸ்பத்திரியில் இருந்து விட்டு அவஸ்தைப்படாமல் இறைவனடி சேர்ந்து விட்டார்.

அம்மா அப்படி இல்லை. நாற்பது வருடங்களுக்கு மேல் சர்க்கரை வியாதி. ஆட்டிப் படைத்தது. டைபாயிட் வந்து அவஸ்தை. பித்தப் பை ஆபரேஷன். கழுத்து வலி பிரச்னை. இத்தனைக்கும் நடுவில் இந்தியாவில், வெளிநாடுகளில் கச்சேரிகள்.

இவை எல்லாவற்றுடன் அம்மா சந்தோஷமாக இருந்ததுடன் தன்னுடைய தெய்வீக சங்கீதத்தினால் ஒவ்வொருவருக்கும் மன சாந்தியை அளித்து வந்தாள். ஆனால் பிரியக் கூடாதது பிரிய முடியாது என்று இருந்தது பிரிந்து போனவுடன் அம்மா நிலை குலைந்தே போனாள். மாமா போன பிறகு அம்மாவுக்கு எல்லாமே போய்விட்டது. போதாக்குறைக்கு கீழே விழுந்து இடுப்பு முறிவு. பல நாட்கள் படுக்கை

**க**டைசி இரண்டு வருடங்கள் அம்மா ஒரு யோகி போல் எல்லாவற்றையும் மறந்து அமைதியாக இருந்து வந்தாள். 'என்ன கச்சேரி கேட்டாய், யார் யார் என்னென்ன ராகம் பாடினார்கள்?' என்று அடிக்கடி என்னைப் பார்க்கும்போது கேட்பார்கள். நானாக 'இன்று உங்கள் பாட்டு கேட்டேன்' என்று சொன்னால் கண்களில் ஒரு ஒளி, முகத்தில் ஒரு பளீர் சிரிப்பு வரும். 'என்ன பாட்டு, எப்போது பாடினது' என்று குழந்தை போல் கேட்பார்.

'நீ சாப்பிட்டாயா, என்ன சாப்பிட்டாய், இங்கே நம் ஆத்தில் சாப்பிட்டாயா?' என்று ஒவ்வொரு முறை கேட்பதுடன் உதவியாளர் விசாலத்தைக் கூப்பிட்டு கிராஸ் செக் செய்து கொள்வார்.

என்னை வளர்த்து ஆளாக்கிய அம்மாவுக்கு அந்திமக் கிரியைகள் செய்யும் பேறு எனக்குக் கிடைத்தது என்னுடைய முன் பிறவி பாக்கியமே. என் சிநேகிதர் ஒருவர் 'நூறு அச்வமேத யாகம் பண்ணின புண்ணியம் உனக்கு' என்று சொன்னார். அம்மாவின் ஆசீர்வாதமே போதும் என்று தோன்றுகிறது. ●



# லேட்டஸ்ட் லவ் மந்த்ரா!

“உங்க நட்பு வட்டாரத்துல வளைய வரும் லேட்டஸ்ட் ஜோக்ஸ் என்ன?” என்று கேட்டதும் கடிகளும் வெடிகளுமாய்க் கலக்கிவிட்டது இந்த இளைய பட்டாளம்.

ஒருவன் இறந்த பின் நரகத்துக்குச் செல்கிறான். அங்கு ஒவ்வொரு நாட்டுக்கென நரகங்கள். முதலில் அவன் ஜெர்மன் நரகத்துக்குப் போய் அங்கு என்ன என்று பார்த்தான்.

“முதலில் உங்களை எலக்ட்ரிக் சேரில் இரண்டு மணி நேரம் உட்கார வைப்பார்கள். பிறகு ஆணியால் ஆன படுக்கையில் ஒரு மணி நேரம்... அதன் பின் நாள் பூரா கசையடி” என ஒருவர் விவரிக்க அவன் அமெரிக்க நரகத்துக்கு ஓட்டமெடுத்தான். அங்கும் இதே கதைதான். ஜப்பான், ரஷ்யா, சீனா... என ஒவ்வொரு நரகத்திலுமே ட்ரீட்மெண்ட் ஒரே போல. கடைசியாக அவன் நம் நாட்டு நரகத்துக்கு வந்தான். வாசலில் நீளமான க்யூ. எல்லோருக்குமே இங்குதான் வர ஆசை. ஆச்சர்யப்பட்டு அவன் ஒருவரிடம் கேட்க அவரும் அதே எலக்ட்ரிக் சேர், ஆணி படுக்கை, கசையடி என விவரித்தார். “அப்படியும் ஏன் உலகெங்கிலிருந்தும் மக்கள் இங்கு வர விரும்புகிறார்கள்” என அவன் கேட்டான்.

“இங்கு எலக்ட்ரிக் சேர் இருக்கு; ஆனா மெயின்டனன்ஸே கிடையாது. ஆதலால் வொர்கிங் கண்டிஷனில் இல்லை. ஏதோ திருட்டுப் பய வந்து படுக்கையிலிருந்து ஆணியெல்லாத்தையும் உருவிட்டுப் போயிட்டான். இங்கே கசையடி கொடுக்கிற சாத்தான், முன்னாள் அரசு ஊழியன், வருவான், கையெழுத்திடுவான். பிறகு கேண்டீன் போயிடுவான். வரவே மாட்டான். ஜாலிதான்” என்றார்.

நரகம்னா இப்படின்னா இருக்கணும்?

• • •

*கோர்ட் ரூமில் -*

*குற்றவாளியிடம் : கீதை மேல கைய வச்சு சத்தியம் பண்ணிச் சொல்லுங்க...*

*குற்றவாளி : ஏங்க, ஏற்கெனவே*

**கேம்பஸ் கலாட்டா!**

சீதை மேல கைய வச்சதி னாலதான் கோர்ட்டுக்குத் தள்ளிட்டு வந்திருக்கீங்க. இப்ப சீதை மேல வேற வைக்கணுமா?

• • •

உண்மையான அன்பென்பது தலையணையைப் போல...

கஷ்டம் வரும்போது கட்டிக் கொள்ளலாம்.

வலி நேரங்களில் சேர்த்துக் கண்ணீர் விடலாம்.

சந்தோஷத்தில் தழுவிக் கொள்ளலாம்.

உங்களுக்கு எப்போதெல்லாம் உண்மையான அன்பு வேண்டுமோ,

ஐம்பது ரூபாய் செலவு செய்து தலையணை வாங்கிடவும்.

• • •

அமிதாப்பின் சமீப வயிற்று வலிக்கு காரணங்கள் -

• ஒரு வேளை ஒவரா ஷ்யவனபிராஷை விழுங்கியிருப்பாரோ ?

• பெப்ஸியை ஏகமா குடிச்சிருப்பாரோ?

• 'ஹாஜ்மோலா' ஜீரண மாத்திரை கம்மியாயிருக்குமோ?

• தடுப்பூசி போட்டிருக்க மாட்டாரோ?

பி.கு. : (மேற் சொன்ன அத்தனை விளம்பரங்களிலும் அமிதாப் நடித்திருக்கிறார்.... ஹி... ஹி..)

• • •

டீச்சர் : நீ எங்கே பிறந்தாய்?

மாணவன் : டீச்சர், திருவனந்தபுரம்...

டீச்சர் : சரி... ஸ்பெல்லிங் சொல்லு பாப்போம்.

மாணவன் : (யோசித்துவிட்டு)... இல்ல மிஸ், நான் கோவாவில் பிறந்தேன்....

• • •

லேட்டஸ்ட் லவ் மந்த்ரா

திங்கள் கிழமை : நட்பு
செவ்வாய் : காதல்
புதன் : திருமணம்
வியாழன் : தேனிலவு
வெள்ளி : சண்டை
சனி : விவாகரத்து
ஞாயிறு : ரெஸ்ட்
திங்கள் : நெக்ஸ்ட்!

- லதாசேகர்



ஒரு மலையடிவாரத்தில் அமைந்துள்ளது அவர்களது வீடு. அந்த மலைத் தொடர் ராட்சச மலைப்பாம்பு போல நீண்டு நெளிந்து படுத்துக் கிடந்தது. அதன் உச்சிப் பகுதிகளில் ஆங்காங்கு கற்பாறைகள். எங்கிருந்து பார்த்தாலும் தெரிகிற மாதிரி அவற்றில் வரையப்பட்டுள்ளன திருமண், சிலுவை, நிலாப்பிறை குறியீடுகள்.

ஆம்பூரில் நாம் சந்தித்த கல்கி வாசகர் குடும்பம், அந்த மலையடிவார வீட்டில் தான் வசித்து வருகிறது. நாற்பது வருட கல்கி வாசகர் ஏ.ஆர்.விஜயன் ஏ.வி. சுற்றுவட்டாரங்களில் விவசாய விளை நிலங்களும் வெகு அதிகம். தான் சிறுவனாய் இருந்தபோது வெள்ளாமை நடந்த பரப்பில், தற்போது பாதியளவு விவசாயம் நடப்பதே பெரிய விஷயம் என்கிறார் ஏ.ஆர். விஜயன். காரணம், ஆம்பூர் பகுதிகளில் அடுக்கடுக்காய்த் தோன்றிய தோல் பதனிடும் தொழிற்சாலைகளும் அவற்றின் ஒட்டு மொத்தக் கழிவு நீரும்.

மலையடிவாரத்தில் அவர்களது பத்து ஏக்கர் தோப்புகளில் மா மரங்களும், தென்னை மரங்களும் விளைச்சலும்

# கைகளில் இருந்தால் கௌரவம்!

சுகந்தா தம்பதி. அவர்களுக்கு இரண்டு மகன்கள். ஒரு மகள், மலர்விழிக்குத் திருமணம் ஆகி தண்டராம்பட்டில் வசித்து வருகிறார். இரண்டு மகன்களுக்கும் திருமணமாகி விட்டது. மூத்த மகன் ஏ.வி. பார்த்திபன் ஆம்பூர் நகரில் வசிக்க, இளைய மகன் ஏ.வி. ஜனார்த்தனன் அவரது மனைவி ஏ.ஜே. பவானி, மகன் ஹரிஷ்குமார் ஆகியோர் மலையடிவார வீட்டில் பெற்றோருடன் வசித்து வருகின்றனர்.

விஜயனின் அப்பா ஏ.பி. ராஜா ரெட்டியார், அந்தக் காலத்தில் ஆம்பூர் பகுதிகளில், ஆயில் மோட்டார் மெக்கானிக்கில் அத்தனை பிரபலம். அப்பொழுதெல்லாம் அதன்


* ஜனார்த்தனன்,
ஏ.ஜே.பவானி,
ஹரீஷ்குமார்

வளர்ச்சியுமற்று வறண்டு கிடக்கிறது.



• பெற்றோருடன்

அமரர் கல்கியின் படைப்புகள் அத்தனையும் வாசித்துள்ளார் ஏ.ஆர். விஜயன். காலங்கள் கடந்தும் நிலைத்து நிற்பவை கல்கியின் எழுத்துகள் என்பது அவரது எண்ணம். இன்று வரைக்குமாக அவர்களது வீட்டுக்குள் நுழைந்திருக்கிற ஒரே பத்திரிகை கல்கி.

"எங்கள் அப்பா, ஆம்பூருக்கு சைக்களில் சென்று தான் வாரா வாரம் கல்கி வாங்கி வருவார். அவர் வருவதற்கு முன்பாகவே சைக்கிள் சத்தம் கேட்டு, வீட்டிலிருந்து நானும் என் தங்கையும் விழுந்தடித்து ஓடுவோம். கல்கியை யார் கையில் முதலில் தருவது என்று அப்பாவுக்குத் திகைப்பாகி விடும். அப்பா மீது விழுந்து பிடுங்கி புத்தகம் பறிப்பதில் சில சமயங்களில் கிழிந்து போய், அன்றைய தினமே புதிதாக இன்னொரு கல்கி வாங்கிய சம்பவங்களும் உண்டு!" எனக் கூறுகிறார் ஏ.ஆர். விஜயனின் இளைய மகன் ஏ.வி. ஜனார்த்தனன்.

அவரது மனைவி ஏ.ஜே. பவானி, தண்டராம்பட்டு ஊரிலிருந்து ஆம்பூருக்கு மருமகளாக வந்தவர். ப்ளஸ் டூ படித்துள்ளவர். பிறந்தவீட்டில் பத்திரிகை எதுவும் வாசித்ததில்லையாம். திருமணமாகி வந்து கடந்த பதினைந்து வருடமாக புகுந்த வீட்டில் கல்கி வாசித்து வருகிறார். கல்கியில் வெளியாகும் கவிதைகளும், சிறுகதைகளும் உள்ளத்தை அள்ளுவதாகக் கூறுகிறார். திரைப்பட நட்சத்திரங்களின் படங்கள் பத்திரிகைகளில் வெகு விரசமாகப் பிரசுரமாகி வரும் இன்றைய கால கட்டத்திலும், அவர்களது படங்களை கண்ணியமாகப் பிரசுரிக்கும் கல்கியின் போக்கு தமக்கு மிகவும் பிடித்துள்ளதாகக் குறிப்பிடுகிறார் ஏ.ஜே.பவானி.

வழிவழியாக வந்து கொண்டிருந்த விவசாயக் குடும்பம் அது. தன்னோடு எங்கே அது முடிந்து விடுமோ என்று அச்சம் கொண்டிருக்கிறார் எழுபத்தியொரு வயதாகும் விஜயன். மூத்த மகன் பார்த்திபன் பி.எஸ்.சி. கெமிஸ்ட்ரி படித்துவிட்டு சர்க்கரை ஆலை ஒன்றில் கெமிஸ்ட்டாக வேலை பார்த்து வருகிறார்.

ஆம்பூரில் கிருஷ்ணாபுரம் காளியம்மன் கோயில் எதிரே எஸ்.டி.டி. பூத், வார மாத இதழ் விற்பனை ஸ்டால் மற்றும் பெட்டிக்கடை வியாபாரத்தில் ஒரு பங்குதாரராக தம்மை இணைத்துக் கொண்டிருக்கிறார் ஏ.வி. ஜனார்த்தனன்.

"எந்தவொரு பக்கத்தையும் ஒளித்து வைத்துப் படிக்க வேண்டியதே இல்லை. அத்தனை தரமானது. கல்கி கைகளில் இருந்தால் அதுவே ஒரு கௌரவம்!" என்று பெருமிதம் பொங்கப் பேசுகிறார் ஜனார்த்தனன்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

வாலிபம் என்பது வானவில் வயசு.
வண்ணக் கனவுகள் வழிகிற மனசு!

# வானவில் வயசு!

‘சுள்’ளென்ற வெய்யிலாய் சூடு பறக்கும் வேகம், ‘ஜில்’லென்ற மழையாய்ப் பொங்கும் உற்சாகம், இரண்டும் கலந்து, வாலிபம் என்கிற வானவில்லை வரைந்து கொடுக்கிறது.

யோசித்துப் பார்த்தால், வாலிபத்துக்கும் வானவில்லுக்கும் எத்தனையோ பொருத்தங்கள் உண்டு.

வானவில் எப்படி உருவாகிறது என்கிற



ஆராய்ச்சிக்குப் பிள்ளையார் சுழி போட்டவர் டெஸ்கார்டிஸ். ஆனால், வானவில் பற்றிய வசீகரத் தகவல்களை வாரி வந்ததென்னவோ ஐசக் நியூட்டன்தான்.

"சாதாரணமாகப் பார்த்தால் சூரிய வெளிச்சம் வெண்மையாய்த் தெரிகிறது. ஆனால் அந்த வெளிச்சத்தில், கண்ணுக்குத் தெரியாத வண்ணங்கள் கலந்திருக்கின்றன. வெளிச்சத்தை மழைத்துளிகள் ஊடுருவும்போது அந்த வண்ணங்கள் வெளியே தெரிகின்றன. அவையே வானவில்லாய் வடிவெடுக்கின்றன" என்றார் அவர்.

வாழ்க்கை என்பது வானம் போன்றது
வாய்ப்புகள் என்பவை வெளிச்சம் போன்றவை.
முயற்சிகள் எல்லாம் மழைத்துளிகள்.
வெளிச்சமும் மழையும் இணையும்போது வானவில் பிறந்துவிடும்.

வாய்ப்பும் முயற்சியும் இணையும்போது வெற்றிகள் மலர்ந்துவிடும் - ஆமாம்! கடந்து போகிற வாய்ப்புகள், பறந்து கொண்டிருக்கும் பட்டங்கள். ‘பாபா’வின் பட்டம் போல் தானாகத் தேடி வராது. முயற்சி செய்தால்தான் கிடைக்கும். வாய்ப்புகளை விளையாட்டுத்தனமாய்த் தவறவிடும் இளைஞர்கள் படித்துப் ‘பட்டம்’ பெற்றாலும்கூட வாலறுந்த பட்டங்களாகவே விழுந்து கிடக்கிறார்கள்.

இன்று, இளைஞர்களின் மிகப்பெரிய பிரச்னை, திறமையின்மை அல்ல. பொறுமையின்மைதான்.

அடடா! ஐசக் நியூட்டனை அங்கேயே விட்டுவிட்டோம்! அவர் இன்னொன்றும் சொல்கிறார். வானவில்லின் மேற்பகுதியில் இருக்கிற சிவப்பு வண்ணத்திலிருந்து 42° டிகிரி கோணத்தில்தான் வானவில் தெரிகிறதாம். அதனால்தான் வானவில் நம் கண்களில் அரைவட்டமாக மட்டுமே படுகிறதாம். உண்மையில் வானவில் அரைவட்டமல்ல. முழு வட்டம்.

மரபின் மைந்தன்
முத்தையா

நம் இளவட்டங்கள்கூட அப்படித்தான். கண்களின் உற்சாகக் குறும்புகளும் விளையாட்டுத்தனங்களும் அவர்களைக் கடற்கரை அரைவட்ட வானவில்லாகவே அடையாளம் காட்டுகின்றன. ஆனால் இளவட்டங்கள் முயன்றால் தங்களுக்குள் இருக்கும் முழுவட்டமும் வெளிப்படும் விதமாய் முன்னேற முடியும்.

உண்மையில் இன்று நிறைய இளைஞர்கள், அடுத்தவர்களை ஜெயித்து விடுகிறார்கள். தங்களிடமே தோற்றுப் போகிறார்கள்.

தங்கள் முழுத்திறமையும் வெளிப்படுவதற்கான வாய்ப்புகளை அலட்சியத்தாலோ அறியாமையாலோ தவற விடுகிறார்கள்.

ஏன் தெரியுமா?

வாலிபப் பருவம், விதம் விதமான உணர்ச்சி

# ...னேஜ் டானிக் தொடர்! 1

## இளமை பொங்குது!



களின் விளைநிலம்.

உணர்ச்சி வயப்பட்டால் அதன் உச்சம் தொடுவது இளமையின் குணம்.

கோபம் வந்தால் கடலளவு, மகிழ்ச்சி வந்தால் மலையளவு.

காதல் வந்தால், வானளவு.

பிரவாகமெடுக்கும் இந்த அதீத சக்தியைப் பக்குவமாய் மடைமாற்றம் செய்தால் முன்னேற்றம் நிச்சயம்.

திரையரங்குகளில், டீக்கடை வாசல்களில், புழுதி பறக்கும் இரண்டு சக்கர வாகனங்களில், இலக்குகள் ஏதுமின்றி அரைவட்ட வானவில்கள் அலைந்து கொண்டிருக்கின்றன.

வெற்றிக்கு ஆசைப்படும் இளைஞர்கள் செய்வதற்கென்று ஓர் அரிச்சுவடிப் பயிற்சி உண்டு. தங்கள் நாட்கள் ஒவ்வொன்றிலும் எவ்வளவு நேரம் விரயமாகிறது என்று கணக்குப் பார்ப்பதுதான் அது.

விளையாட்டுத்தனம், வாலிபத்தின் அம்சம்தான். ஆனால் அதுவே, வாலிபத்தின் முழுநேர வேலை அல்ல. சர்க்கஸ் கூடாரத்தில் பாருங்கள். மட்டையும் கையுமாய், தக்காளிப்பழ மூக்கோடு சுற்றிச் சுற்றி வருகிற கோமாளி, கோமாளியாகவா இருக்கிறார்?

ஒற்றைச் சக்கர சைக்கிளை ஓட்டத் தெரிகிறது. யானையின் தும்பிக்கையில் ஊஞ்சலாட முடிகிறது. அந்தரத்தில் பாரில் ஏற்றினால்கூட ஜோராகத் தாவத் தெரிகிறது. எல்லாம் தெரிந்ததனால் அவர் கோமாளியாக வேடம் போடுகிறார்.

ஒன்று புரிகிறதா? எல்லா வித்தையும் தெரிந்தவர்கள் கோமாளியாக வேடம் போடலாம். ஆனால் எல்லா வித்தையும் தெரிந்ததாய் வேடம் போடுகிறவர்கள் ஏமாளியாகத்தான் நேரும்.

புதிய புதிய விஷயங்களை, நுட்பங்களை, வித்தைகளை உள்வாங்கிக் கொள்கிற பருவத்தைத் தவறவிட்டு விட்டால் பிறகு எதுவுமே மனத்தில் பதியாது.

இளமைக்கே உரிய சந்தோஷத்திற்கென்று நேரம் செலவிடுங்கள். அதேநேரம் இளமையில் மட்டுமே இருக்கக்கூடிய திறமைகளைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். ஒவ்வொரு நாளிலும் அர்த்தமுள்ளதாய் எவ்வளவு நேரம் நகர்கிறதென்று பாருங்கள். அந்த நிமிடங்கள் உங்கள் வாழ்வில் வரவு வைக்கப்பட வேண்டியவை.

பயனில்லாமல் எத்தனை நேரம் கழிகிறதென்று பாருங்கள். அவையெல்லாம் விரயக்கணக்கில் எழுதப்பட வேண்டியவை. கூட்டிக் கழித்தால் வாழ்க்கைக் கணக்கு புரியும்.

ஓர் இளைஞன் தண்ணீரில் விழுந்து தத்தளித்துக் கொண்டிருந்தான். நடுத்தர வயதுக்காரர் ஒருவர் காப்பாற்றிக் கரை சேர்த்தார். கையெடுத்துக் கும்பிட்ட இளைஞன் சொன்னான், ''ஐயா! என்னைக் காப்பாற்றியதற்கு நன்றி. இதற்குக் கைம்மாறாய் நான் என்ன செய்ய வேண்டும்?''

அந்த மனிதர் சிரித்துக்கொண்டே சொன்னார், ''இன்னும் பத்து வருடங்களுக்குப் பிறகு நாம் சந்தித்தால், உன்னைக் காப்பாற்றியதற்காக நான் வருத்தம் கொள்ளாதபடி நீ வாழ வேண்டும்.''

அர்த்தமுள்ள வாழ்க்கைதான் அழகான வாழ்க்கை -

வாழ்க்கைக்குள் நுழைவோம் வாருங்கள்.

(தொடரும்)

''நான் காலேஜ்ல படிக்கும்போது எல்லா பெண்களும் என்னைக் கண்டா விட மாட்டாங்க...''

''அடப்பாவி... அவங்ககிட்டேயும் கடன் வாங்கியிருக்கியா...?''

- மூர்த்தி



# தை தோஷ நிவர்த்தி - பரிகார ஸ்தலமான இராமேஸ்வரத்தில் அமாவாசை திதியில்

# அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ஸ்ரீ இராமனும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவும், முனிவர்கள் பலரும் இங்கு வந்து நீராடியதால் இராமேஸ்வரம் க்ஷேத்ரத்திற்கு மென்மேலும் பெருமை உண்டு. இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத பலனைக் கொடுக்கும்.

இராமேஸ்வரத்தில் நீராடி அன்னதானம் செய்தால் கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகளில் நீராடிய புண்ணிய பலன் ஒருசேர கிடைக்கும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். தை அமாவாசை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். இந்த புண்ணிய பூமியில் அன்னமளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக வடை, பாயசத்துடன் அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ சிறிய தொகை, அரிசி போன்ற உணவுப் பொருட்களும் புதிய வஸ்திரங்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.

★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் 6 மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் 1 வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு, ஸ்ரீராம் பப்ளிகேஷன்ஸ் வெளியீடான **வெற்றி தரும் விநாயகர் வழிபாடு, பகவான் பாபா** ஆகிய இரண்டு நூல்களும் அனுப்பி வைக்கப்படும்.

★ **ரூ.1000, ரூ.5000** அனுப்பும் அன்பர்களுக்கு இராமேஸ்வரத்தில் பூஜிக்கப்பட்ட வெள்ளி டாலர், ஸ்வாமி படம் தை அமாவாசைக்குப் பின்னர் பிரஸாதத்துடன் அனுப்பி வைக்கப்படும்.

வஸ்த்ர தானம் செய்ய விரும்பும் அன்பர்கள் ஒரு வேஷ்டி, துண்டு, ஒரு புடவை, ரவிக்கைக்கான தொகை **ரூ. 250** சேர்த்து அனுப்பினால், அவர்கள் சார்பாக வஸ்த்ர தானம் செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும். மனநிம்மதி அன்னதானத்திலும் வஸ்த்ர தானத்திலும் கிடைக்கிறது. இராமேஸ்வரத்தில் பிறந்த நாள், திருமண நாள் என நீங்கள் நினைக்கும் நாளில் அன்னதானம் செய்வதற்கு நாங்கள் ஏற்பாடுகளைச் செய்துள்ளோம். ஆகவே நீங்கள் நினைக்கும் தேதியில் அந்தணர்களுக்கும், சாதுக்களுக்கும், ஏழை எளியவர்களுக்கும் அன்னதானம், வஸ்த்ர தானம் செய்யலாம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் **GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41** என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனிதமான அன்னதான ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.



*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை

## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST

**M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**

**☎ : (044) 24900303, 24900603, 24416122 Mobile : 94441 16300, 94443 19300**

**தை அமாவாசைக்கு நேரில் வர விரும்புபவர்கள் முன்பதிவு செய்து கொள்ளவும்.**

சுனாமி வந்தபோது அலறி யடித்து மக்கள் ஓடினாங்களே ஞாபக மிருக்கிறதா? கிட்டத்தட்ட அதே பயத்தில் ஜனனியைக் கண்டு ஜன்னி வந்தது மாதிரி நடுங்குகிறது தமிழ்த் திரை உலகம்.

பால் வடியும் இந்த முகத்தைப் பார்த்தால் அப்படி எல்லாம் தோணலையே என்று நீங்கள் குழம்புவது புரிகிறது.

"என்ன செய்ய? விஜய் டீ.வி.யில நான் தொகுத்து வழங்கற 'சினிமா காரம் காபி' நிகழ்ச்சியால வந்தது எல்லாம்'' என்று முத்துப்பற்கள் மின்ன சிரிக்கிறார் ஜனனி.

''எனக்கு சினிமாவுல நிறைய ஃப்ரெண்ட்ஸ். மாடலிங்குல இருக்கிறதால நம்மோட கலைவட்டம் கொஞ்சம் பெரிசு. ஆனா அரசல்புரசலான சினிமா செய்தி களை நிகழ்ச்சியில சொல்றதால என்னைப் பார்த்தாலே சினிமாக்காரங்க கப்சிப் ஆயிடறாங்க. சிலர் முறைக்கறாங்க. ஸ்கிரிப்டை எங்க டைரக்டர்தான் எழுத றார்னு சொன்னா கேக்க மாட்டேங் கறாங்களே'' சிணுங்குகிறார் ஜனனி.

'சுந்தரா ஃபவுண்டேஷன்'தான் என் முதல் விளம்பரம். நல்ல அடித்தளமா அமைஞ்சு, ஏதோ இன்னைக்கு வரைக்கும் சொல்லிக்கிற மாதிரி மாடலிங்குல நிலைச்சு நின்னாச்சு'' என்றவரிடம், அடுத்தது சினிமாவா என்றால் குரலை உயர்த்துகிறார்.

"வாய்ப்பே இல்லை. சினிமாவுக்கு என் முகம் பொருத்தமா இருக்காதுங்கிறது என் கணிப்பு. ஆனாலும் காலையிலே நியூஸ் பேப்பரும் பால் பாக்கெட்டும் எங் களுக்கு வருதோ இல்லையோ, தமிழ் சினிமாவிலிருந்து யாராச்சும் தினமும் போன் பண்ணி இந்தத் தேவதையை ஹீரோயினாக்க போராடுறாங்க. வேண்டாம்பா. இப்போ எலக்ட் ரானிக் மீடியா படிக்கிறேன். மேலே மேலே படிச்சு மேலே மேலே சாதிக்கணும். அது போதும். அதனால அஸின், நயன்தாரா, நமீதா.. எல்லோரும் இப்போ நிம்மதியா மூச்சை விட்டுக் குங்க.'' என்றார் ஜகஜக ஜன்னி.

- ச.ந.கண்ணன்

அட்டை, படம் : சந்தோஷ் ராஜ்

# அலறுது தமிழ் சினிமா!

# நடக்குமென்பார்; நடக்கும்!

**8.1.2006 முதல் 14.1.2006 வரை**



**தஞ்சை பரத்வாஜ்**

**மேஷம் :** நல்ல யோகமான வாரம். பொருளாதாரக் கஷ்டம் இராது. கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். வீடு/வாகனம் வாங்க நல்ல நேரம். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. வேலையில் உயர்வு ஏற்படும். உறவினர்/ நண்பர்களால் அனுகூலம் ஏற்படும். வியாபாரிகள் தொழில் துறையில் முன்னேற்றம் காணலாம். மாணவ/மாணவிகள் நற்பலனை அடைவார்கள். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். ஆஞ்சநேயர் கோயிலுக்கு சனிக்கிழமை தோறும் சென்று வரவும்.





**ரிஷபம் :** நன்மையும் தீமையும் கலந்த வாரம். வாரத்தின் கடைசியில் முன்னேற்றம் ஏற்படும். வாக்குவாதம் தவிர்க்கவும். கணவன்/ மனைவி விட்டுக் கொடுத்துப் போகவும். உடல்நிலையில் கவனம் தேவை. நெருங்கிய உறவினர், நண்பர்கள் பிரிந்து செல்லும் வாய்ப்பு வந்து சேரும். புதிய தொழில் முடிவைச் சற்று தள்ளிப் போடவும். திருமண காரியம் கைகூடும். குழந்தைகள் பற்றிய மனக் கவலை தீரும். குரு/ராகு/கேது வழிபட்டு வரவும்.





**மிதுனம் :** மேன்மையான வாரம். நினைத்தது நடக்கும். உடல்நிலை நன்றாக இருக்கும். தனவிருத்தி ஏற்படும். உத்தியோக உயர்வு ஏற்படும். சிலருக்கு நல்ல வேலை வாய்ப்புக் கிட்டும். வீடு/வாகனம் வாங்கும்படியான வாய்ப்பு வந்து சேரும். வியாபாரிகள் நற்பலனை அடைவார்கள். கலைஞர்கள் ஏற்றம் அடைவார்கள். ராகு/கேது வழிபாடு சிறந்தது.







**கடகம் :** சிறப்பான வாரம். தொட்டவை யாவும் வெற்றியை அளிக்கும். புண்ணிய ஸ்தலம் செல்வீர்கள். தனம், வாக்கு, கல்வி மேலோங்கும். சிலருக்கு வீடு மாறிச் செல்லும்படி இருக்கும். குழந்தைகள் மூலம் சந்தோஷமான காரியம் கைகூடும். சிலருக்குத் தூர தேச பிரயாணம் செல்ல நேரிடும். நண்பர்/ உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். குரு/சனி





**எ**னது மகனுக்கு எப்போது திருமணம் நடக்கும்?

- கார்த்திகேயன், பவானி

உங்கள் மகனுக்கு 22.1.2006க்குப் பிறகு திருமணம் கைகூடும். உடன்பிறப்பு ஒருவர் உள்ள இடத்தில், உறவில்லாத இடத்தில் படித்த, பண்புள்ள வரன் அமையும்.

**எ**னது மகன் திருமணத்தில் நாட்டமில்லை என்று கூறுகிறான். வெளிநாட்டுக்குக் குடிபெயரப் போவதாகவும் சொல்கிறான். அவன் எங்களுடன் இருப்பானா? திருமண காரியங்கள் எப்படி நடக்கும்?

- ரத்னா நாகேஷ், பெங்களூர் - 3

உங்கள் பையன் தாயாரைவிட்டு வெகுதூரம் போய் வாழக்கூடிய ஜாதகம். தற்போது சந்திரதசை நடக்கிறது. உள்ளூரில் வீடு வாங்கி வெளியூர் போய் வாசம் செய்யும் ஜாதகர். 2006-ல் ஒரே மதத்தைச் சேர்ந்த பெண்ணைத் திருமணம் செய்வார். நன்கு படித்த, அழகும் அறிவும் உள்ள பெண் அமைவாள்.

**எ**ன் மகனுக்கு எப்பொழுது வேலை கிடைக்கும்?

- ஆர். ருக்மணி, சென்னை - 78

தங்கள் மகனுக்கு 2006 ஆரம்பத்தில் நல்ல வேலை கிடைக்கும். முதல் வேலை கைவிட்டு இரண்டாவது வேலை வெளிநாட்டில் நிரந்தரமாக அமையும். 26வது வயதில் செட்டிலாகி விடுவான். 27 வயதில் திருமணம் நடக்கும்.

**எ**னது மகனுக்குத் திருமணம் எப்போது நடக்கும்?

- ஆர். ரெங்கநாதன், பெங்களூர் - 37

உங்கள் மகனுக்கு 2006-ல் திருமணம் முடியும். உடன்பிறப்பு இருவர் உள்ள இடத்தில், நன்கு படித்த, பண்புள்ள, வேலையிலுள்ள மனைவி அமைவாள்.

வழிபாடு செய்து வரவும்.

**சிம்மம் :** எதிலும் கவனமுடன் செயல்பட வேண்டிய வாரம். வாக்குவாதம் தவிர்க்கவும். குடும்ப வழியில் அனுசரணை தேவை. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையுடன் செயல்படவும். ஆரோக்கியத்தில் கவனம் தேவை. சத்ரு தொல்லை இருக்கும். வண்டி வாகனத்தில் போகும் பொழுது பார்த்துச் செல்லவும். வியாபாரிகளுக்குத் தொழிலில் மந்தகதி இருக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. ஆஞ்சநேயரை வழிபட்டு வரவும். ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும். நன்மை தரும்.

**கன்னி :** சிறப்பான வாரம். சுபகாரியம் கைகூடும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். உத்தியோகத்தில் நல்ல உயர்வு, இடமாற்றம் ஏற்படும். செலவுகள் கட்டுக்குள் இருக்கும். வீடு வாங்க நல்ல நேரம். மாணவ/மாணவிகள் படிப்பில் முன்னேற்றம் அடைவார்கள். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு/கேது வழிபட்டு வரவும்.

**துலாம் :** மேன்மையான வாரம்.

சுத்த ஜாதகமாகச் சேர்க்கவும். தோஷம் எதுவும் இல்லை.

**எனது மகனின் வேலை வாய்ப்பு, திருமணம் பற்றிக் கூறவும்...**

**- எம். பரத்வாஜ், நாக்பூர்**

தங்கள் பையனுக்கு 2.12.2006 வரை சூரியதசை நடைபெறும். இது முடிந்து சந்திரதசை ஆரம்பத்தில் நல்ல தனியார் நிறுவனத்தில் வேலை கிடைக்கும். 2007-ல் திருமணம் நடக்கும். பொறுமை காக்கவும்.

# பரத்வாஜ் பதில்கள்

வழக்கு, வியாபாரம் வெற்றி அளிக்கும். முடியாத காரியம் முடிவுக்கு வரும். சுபகாரியம் கைகூடும். வெளிதேசம் செல்லும் வாய்ப்புக் கிட்டும். மனக்கவலை நீங்கும். உடல்நிலை நன்றாக இருக்கும். மனத்தில் தைரியமும் புத்துணர்வும் கிட்டும். பணக் கஷ்டம் வராது. உறவினர்களால் ஆதாயம் கிட்டும். வீடு, வாசல் வாங்க நல்ல காலம். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வரவும்.

**விருச்சிகம்** : செல்வாக்குப் பெற்ற வாரம். வாக்கு, தனம், கல்வி மேலோங்கும். கொடுக்கல் வாங்கல் நற்பலனைத் தரும். வீடு வாங்கலாம். திருமண காரியம் கைகூடும். உல்லாசப் பிரயாணம் ஏற்படும். வாகனம் வாங்கலாம். குடும்ப வாழ்வு நன்றாக அமையும். நெருங்கிய கூட்டாளிகள் விலகிச் சென்று தனி தொழில் ஆரம்பிப்பார்கள். பகைமை விலகும். பத்திரிகைகளில் பெயர் வரும். ராகு/கேது வழிபட்டு வரவும்.

**தனுசு** : நினைத்தது கைகூடும் வாரம். வரவு செலவு கட்டுக்குள் அடங்கி இருக்கும். வேலையில் மாற்றம் ஏற்படும். தன விருத்தி ஏற்படும். வாக்கு வன்மை மேலோங்கும். எதிரிகள் அழிவார்கள். உடல்நிலையில் முன்னேற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். திருமண காரியம் கைகூடும். பொருளாதாரக் கஷ்டம் இருக்காது. செலவுகள் நியாயமானதாக இருக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். நல்ல வேலை வாய்ப்பு வந்து சேரும். ராகு/கேது/சனி வழிபாடு செய்து வரவும்.

**மகரம்** : வெற்றிக்கனியை அடையும் வாரம். தனம், வாக்கு, கல்வி மேலோங்கும். எண்ணங்கள் யாவும் ஈடேறும். பணக் கஷ்டம் இராது. வீடு வாங்க நல்ல காலம். வாகன வசதி ஏற்படும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். நண்பர், உறவினர் அனுகூலம் ஏற்படும். தெய்வபலம், ஆத்மபலம் இருக்கிறது. செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். உடல்நிலை பாதிக்காது. சனி/குரு வழிபாடு செய்து வரவும்.

**கும்பம்** : எண்ணங்கள் யாவும் ஈடேறும் வாரம். பொருளாதாரக் கஷ்டம் வராது. உத்தியோக மேன்மை கிட்டும். உடல் நிலை பாதிக்காது. தனவிருத்தி ஏற்படும். கணவன்/ மனைவி அனுசரணையாகப் போகவும். யாரிடமும் வாக்குவாதம் வேண்டாம். வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. கொடுக்கல், வாங்கலில் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ளவும். திருமண காரியம் கைகூடும். சுபச்செலவு ஏற்படும். மன சலனம் போகும். எதிரிகள் தொல்லை விலகும். வியாபாரம் முன்னேற்றம் காணும். ராகு/கேது வழிபாடு செய்யவும்.

**மீனம்**: உத்தியோகத்தில் மாற்றம் பெறும் வாரம். தன விருத்தி இருக்கும். வாக்குவன்மை மேலோங்கும். எதிரிகளால் தொல்லை இருக்காது. திருமணம் கைகூடும். செலவுகள் சுபமானதாக இருக்கும். உடல்நிலை சீராகும். வீடு வாங்க உத்தமம். புத்திரபாக்கியம் ஏற்படும். கலைஞர்களுக்கு முன்னேற்றம் கிட்டும். ராகு/கேது/குரு வழிபட்டு வருதல் நற்பலனை அளிக்கும். ○

# உலகம் இவ்வளவுதான்!



ஈராக், காத்ரினா, இங்கிலாந்து குண்டு வெடிப்பு, புல்டோஸர், கங்குலி, சானியா மிர்ஸா, பேய் மழை என்று சென்ற வருட சோகங்கள், சாதனைகள் போன்றவற்றைப் புள்ளி விவரங்களோடு தொகுக்கும் பொறுப்பை இயர்-புக்காரர்களுக்கு அன்பளித்து விட்டு சென்ற வருடத்தின் சில அதி முக்கிய சாதனைகளை காப்ஸ்யூல் வடிவில் காணலாம்.

* ஜாக்கிசான்

சாதனை 09 : குட்டிக் குழந்தைகள், வளர்ந்த குழந்தைகள் எல்லோரையும் கண்டி இழுத்திருக்கிறது ஹாரி பாட்டரும் பாதி ரத்த இளவரசனும். புத்தகம் வெளிவருவதற்கு முன்பே கடைக்குள் புகுந்து ரகசியமாக டார்ச் அடித்துப் படித்திருக்கிறார்கள். கடை வாசலில் ஜமுக்காளம் விரித்துப் படுத்து உறங்கியிருக்கிறார்கள்.

சாதனை 08 : விண்வெளிக்குச் செல்வது டீக்கடைக்குச் செல்வது போல் ஆகிவிட்டது. 'இதோ இப்ப வந்திடறேன்' என்று சொல்லிவிட்டு துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு கிளம்பிவிடுவது சாத்தியமாகிவிட்டது. ஷேர் ஆட்டோ மாதிரி நின்று நின்று ஏற்றிக் கொள்ளும் விண்கலங்கள் பல தயாராகிக் கொண்டிருக்கின்றன. (அநேகமாக அடுத்த வருடத்துக்கு அடுத்த வருடம் சகாய விலையில் மாதாந்திர பயண அட்டை வந்துவிடும்)



* ஹாரிபாட்டர்



* ஜார்ஜ் புஷ்

சாதனை 07 : மனிதர்களும் ரோபோக்களும் இரண்டறக் கலந்து விட்டனர். பால் வாங்கி வர, முட்டைக்கோஸ் நறுக்கித் தர, டீவி ரிமோட் தேடி எடுத்துத் தர என்று வகைவகையான ரோபோக்கள் புழக்கத்துக்கு வந்துவிட்டன. 'டான்சிங் மெஷின்' எனப்படும் அவள்- ரோபோ கிட்டத்தட்ட உங்களது காதலி. இவளது இதமான கைகளைப் பற்றிக் கொண்டு மெலிதாகச் சுழன்று நடனமாடலாம். சென்சார் பொருத்தப்பட்டிருப்பதால் உங்களது அடுத்த நடன அசைவை முன்கூட்டியே யூகித்து பாந்தமாக வளைந்து கொடுக்கும். வெளியே கூட்டிச் செல்லலாம். ஐஸ்க்ரீம், சாக்லேட் கேட்காத, நொடிக்கொரு தரம் எஸ்.எம்.எஸ் அனுப்பத் தேவையில்லாத, 'அம்மா திட்டுவாங்க' என்று

# 2005 டாப் நைன் சாதனைகள்!

சால்ஜாப்பு சொல்லாத பெண் சிநேகிதி தயார்.

**சாதனை 06 :** அவசர ஆத்திரத்துக்குப் பயன் படும் கருவி என்பது போய் பாட்டுக் கேட்பதற்கு, ஈ-மெயில் அனுப்புவதற்கு, பணம் எடுப்பதற்கு, வீட்டுக்கதவை சாத்துவதற்கு, விளையாடுவதற்கு என்று செல்பேசியின் உபயோகம் நீண்டு கொண்டே செல்கிறது.

**சாதனை 05 :** சீன மொழி, கொரிய மொழி, ஜப்பானிய மொழி உட்பட தமிழ், தெலுங்கு என்று அனைத்து மொழிகளையும் பேசும் ஜாக்கிசானின், ஹோம் அலோன், ஸ்பேஸ் ஜாம் வகையறா திரைப் படங்கள். ஜாக்கி சானுக்கு 'ழ, ஞ' இரண்டும் அழகாக வருகிறது.

• சானியா

**சாதனை 04 :** தகவல் தொழில்நுட்பம், உருப் படியான இணையதள இதழ்கள், உங்கள் வீட்டு கொல்லைப்புறத்திலுள்ள கொடிக்கம்பத்தில் எத் தனை கர்சீப், பனியன், துப்பட்டாக்களைக் காயப் போட்டிருக்கிறீர்கள் என்பதை உட்கார்ந்த இடத்திலிருந்தே கூகில் எர்த் கொண்டு சரி பார்க் கலாம்.

**சாதனை 03 :** பஞ்ச தந்திர கதை புத்தகத்தை கையில் எடுத்துக்கொண்டு ஒவ்வொரு மிருகமாக க்ளோனிங் செய்துகொண்டிருக்கிறார்கள். ஆடு முடிந்து விட்டது. இப்பொழுது ஜூ குட்டி. நடத்தி முடித்திருப்பவர்கள் தென் கொரிய மருத்துவர்கள். "பல்லி, ஒட்டகச்சிவிங்கி, உர ராங்குட்டான் என்று எதை யாவது என்னவாவது செய்து கொள்ளுங்கள். மனிதர்களிடம் மட்டும் வந்து விடாதீர்கள்" என்கிறார்கள் க்ளோனிங் கர்களை அச்சத்துடன் கவனித் துக்கொண்டிருக்கும் ஆன்ட்டி - க்ளோனிங்கர்கள்.

**சாதனை 02 :** எல்லோ ரையும் கொதிப்படைய வைத்த ஜார்ஜ் புஷ்.

**சாதனை 01 :** எல்லோ ரையும் சிரிக்க வைத்த ஜார்ஜ் புஷ்.

**- மருதன்**

• கங்குலி

# "கணக்கு ஒண்ணு இருக்கு!"

ரசிகர்கள் பல்ஸ் எகிறிக்கொண்டிருக்கிறது. கடந்த இரண்டு வருடங்களில் மூன்றாவது முறையாக ஆட்டக்களத்தில் மோதவிருக்கின்றன. இந்தியா - பாகிஸ்தான் அணிகள், 13ம் தேதி முதல் டெஸ்ட் லாகூரில் தொடக்கம். போகி, பொங்கல், காணும் பொங்கல் எல்லாம் கிரிக்கெட் மோகத்தில் காணாமல் போகப் போகிறது.

சென்றமுறை பாகிஸ்தான் சென்றபோது அதகளம் ஆடிவிட்டு வெற்றிவாகையோடு திரும்பியது கங்கூலி தலைமையிலான இந்திய அணி. இந்தமுறை காலச் சுழற்சியில் ஏராளமான மாற்றங்கள். ட்ராவிட் கேப்டனாகிவிட அணியில் கங்கூலி இடம் பிடிப்பதற்குள் ஏகப்பட்ட தாம்தூம்கள்.

"இன்ஸமாமிடம் பேசினேன். இந்தியாவை வீழ்த்த அவர் உருவாக்கியுள்ள சூத்திரங்கள் அசத்துகின்றன. இன்ஸமாமின் வலையில் இந்தியா நிச்சயம் கவிழப் போகிறது. இம்ரான்கான் அறிவுரைப்படி வேகப்பந்துக்குச் சாதகமான பிட்ச்சுகள் தயார் செய்யப்படுகின்றன" என்று வார்த்தையிலேயே பயம் காட்டுகிறார் பாகிஸ்தானின் முன்னாள் அதிரடி பௌலர் வக்கார் யூனூஸ்.

சென்றமுறை இந்தியாவிடம் செல்லாக்காசான சோயிப் அக்தர் அடிபட்ட புலியாக சீறிக்கொண்டிருக்கிறார். "இதுவரை இந்தியாவிடம் மட்டும் நான் சோபித்ததேயில்லை. அவர்களை வீழ்த்த வேண்டிய கணக்கு ஒன்று நீண்ட நாட்களாக தீர்க்கப்படாமல் இருக்கிறது" என்று உறுமுகிறார். சமீபத்தில் நடந்த பாகிஸ்தான், இங்கிலாந்து தொடரில் அதிக விக்கெட்டுகள் கைப்பற்றி மனிதர் ஃபுல் ஃபார்மில் இருக்கிறார். சென்றமுறை இவரை உலுக்கியெடுத்து 'மேன் ஆஃப் த சீரீஸ்' பட்டம் வாங்கிய


• சசசின்


• அக்தர்

சேவாக் இன்னொரு சாமியாட்டம் ஆட வேண்டிய கட்டாயம் இப்பொழுது.

இந்திய கேம்பில் டெண்டுல்கர் பவுலிங் மெஷினில் பயிற்சி எடுக்கிறார். சேவாக் பாகிஸ்தான் தொடரை தன் லட்சியமாக கருதுகிறார். டிராவிட், சேப்பலுடன் இணைந்து வியூகங்களை வகுத்துக்கொண்டிருக்கிறார்.

தொடங்கிவிட்டது மூன்றாம் உலகப் போர்!

- சநகன்

# இனிய புத்தாண்டு, பொங்கல் நல்வாழ்த்துகள்

ராசிக்கல் மோதிரம் வாங்க ராசியான கடை

# P.R. JEWELLERY






GOLD, SILVER, DIAMOND & BIRTH STONES
Old No. 102, New No. 138, USMAN ROAD,
T. NAGAR, CHENNAI - 600 017.
PH: 24344442, 24327764 TUESDAY HOLIDAY
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**PROPRIETOR : P. RAVINDHIRAN**
(10.00 AM to 1.30 — 3.30 PM to 8.00 PM)

**P.R.** ஜுவல்லரியில் ராசிக்கல் மோதிரம் வாங்கி அணிந்துபயன்பெறுங்கள். ஒவ்வொரு ராசிக்கும் மோதிரம் ரூ. 400/-

**P.R.** ஜுவெல்லரி தனது **20**-வது ஆண்டு விழாவை ஆனந்தமாகக் கொண்டாடுகிறது. வாடிக்கையாளர் கள் அனைவருக்கும் இதயம் கனிந்த நன்றி. வாழ்க்கையில் அனைவரும் ஆனந்த மாக இருப்பதற்கு அதிர்ஷ்டத்தை அள்ளித் தரும் முழுமுதற் கடவுள் ஆனந்த நர்த்தன வினாயகரை **40** கலைஞர்களை வைத்து **42** மாதங்களில் **890** KG எடையில் செய்து முடித்துள்ளோம்.

உலகிலேயே மிகப் பெரியது உயரம் **192** செ.மீ., அகலம் **115** செ.மீ., நீளம் **95** செ.மீ., சிற்ப சாஸ்திர முறைப்படி செய்யப்பட்டது. கண்காட்சிக்காக எங்கள் கடையில் வைக்கப்பட்டுள்ளது. அனைவரும் ஆனந்த நர்த்தன வினாயகரைத் தரிசித்து ஆனந்தமாக இருக்க வேண்டுகிறோம்.

ஆனந்தமாக நடனமாடும் ஆனந்த நர்த்தன வினாயகரை தினந்தோறும் வழிபட்டு தினசரி வேலைகளைத் தொடங்கினால் நாள் முழுவதும் ஆனந்தமாக இருக்கலாம்.

ஒவ்வொருத்தர் வீட்டிலும் இருக்க வேண்டிய படம்
ரூபாய் 20/- தபாலில் பெற ரூபாய் 30/- M.O. அனுப்பவும்.
விற்பனைக்காக ரூபாய் 10/- முதல் 10,000/-ம் வரை
108 மாடலில் வினாயகர் வைக்கப்பட்டுள்ளது.

மேஷம், விருச்சிகம் - பவழம், ரிஷபம், துலாம் - வைரம், மிதுனம், கன்னி - மரகதபச்சை, கடகம் - முத்து, சிம்மம் - மாணிக்கம், தனுசு, மீனம் - புஷ்பராகம், மகரம், கும்பம் - நீலம்.

முகவரி தெளிவாக எழுதவும்.

எமது சிறப்புப் பேட்டியை விஜய் டீ.வி.யில் வியாழன்தோறும் காலை 9.30 மணிக்கு காணத் தவறாதீர்கள்.

இந்தியாவின் முதல் திரைப்படம், தாதா சாகேப் பால்கேயால் உருவாக்கப்பட்ட 'ராஜா அரிச்சந்திரா'. வெளிவந்த ஆண்டு 1913... தமிழில் வெளிவந்த முதல் பேசும்படம் காளிதாஸ். வெளி வந்த ஆண்டு 1931.

- 'தமிழ் சினிமாவின் கதை' அறந்தை நாராயணன்.



* 'விருமாண்டி' படத்தில்...

"மதுரை மண்ணை அடிப்படையா வச்சு நான் ஒரு படம் எடுக்கப்போறேன். அந்த விஷயமா உங்க கிட்ட பேசணும். சென்னைக்கு வாங்க" இந்தத் தொலைபேசி அழைப்பு கமல்ஹாசனிடமிருந்து எனக்கு வந்தபோது ஆச்சரியம் தாங்கவில்லை.

கமல்ஹாசன் எனக்கு நல்ல நண்பர், உலகறிந்த மிகச் சிறந்த நடிகர், பல்துறை வித்தகர். அவரைச் சந்தித்துப் பேசப் போகிறோம் என்ற மகிழ்ச்சியில் தூக்கமே வரவில்லை. சென்னையில் ஆழ்வார்பேட்டையில் உள்ள அவருடைய அலுவலகத்தில் எங்களுடைய சந்திப்பு நடந்தது.

மூன்று நாட்களாக இடைவிடாது அவர் எனக்குக் கதை சொன்னவிதமும், அதில் வருகிற காட்சிகளை நடித்துக்காட்டிய விதமும் ஒரு பிரமாண்டமான திரைப்படத்தை நேரில் பார்ப்பதைப் போன்ற அனுபவம் ஏற்பட்டது. அந்தக் கதைதான் 'சண்டியராக' இருந்து 'விருமாண்டி'யாக மாறிய படம்.

'விருமாண்டி' எடுப்பதற்கு முன்னால் கமலும், நானும் மதுரை மாவட்டத்தைச் சுற்றியுள்ள பல கிராமப் பகுதிகளுக்குச் சென்று வந்தோம். கிராமத்துத் திருவிழா, ஜல்லிக்கட்டு, அந்தப் பகுதி திருமணங்கள், இறந்தவர் வீடுகளில் நடைபெறும் சடங்குகள் என்று

# சினிமாவுக்குப் போகலாம் வாங்க!

ஒவ்வொன்றாகப் பார்த்துத் தன் சிறிய கேமிராவிலும், தன் மனத்திலும் பதிவு செய்துகொண்டார் கமல்.

படப்பிடிப்பு தொடங்கியது. திடீரென்று ஒருநாள் கமல் "நீங்கள் இந்தப் படத்தில் நடிக்கிறீங்களா?" என்று கேட்டார். எனக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. சினிமா ரசிகனாக, சிறுவயதில் நாடகங்களில் நடித்தவனாக, பேராசிரியராக, பட்டிமன்ற நடுவராக, சின்னத்திரையில் வந்து கொண்டிருக்கும் நான் வெள்ளித் திரையில் நடிக்க வேண்டும் என்றபோது, திகைப்பு ஏற்பட்டது. என் தயக்கத்தைப் பார்த்த அவர், "ஒன்றும் கவலைப்பட வேண்டாம். நீங்கள் மேடையில் செய்ததையே இந்தப் படத்திலும் செய்யலாம். கிராமத்து ஜல்லிக்கட்டு விழாவில் நேர்முக வர்ணனை அறிவிப்பாளர் வேலைதான். ஜல்லிக்கட்டு மாட்டை நான் பிடிக்கிறேன், மைக்கை நீங்கள் பிடியுங்கள்" என்றார் கமல்.

சென்னையில் கேம்பகோலாவில் படப்பிடிப்பு. நூற்றுக்கணக்கான கொம்பு சீவப்பட்ட ஜல்லிக்கட்டு மாடுகள், 200க்கும் மேற்பட்ட மாடு பிடிக்கும் வீரர்கள். 1000க்கும் மேற்பட்ட கிராமத்துப் பார்வையாளர்கள். வெடிச்சத்தம். தாரை தப்பட்டைகளுடன் கிராமத்து வாடிப்பட்டி மேளம். பத்தடி உயரத்தில் போடப்பட்ட ஜல்லிக்கட்டு மேடை.

ஜல்லிக்கட்டு மேடையில் என்னோடு இருந்தவர்களோ நெப்போலியன், பசுபதி, பாலாசிங், ஓ.ஏ.கே. சுந்தர் போன்ற பிரபலமான நடிகர்கள், ஜல்லிக்கட்டை வேடிக்கை பார்த்த மக்களோடு அப்படத்தின் கதாநாயகியான அபிராமி, பழம்பெரும் நடிகை எஸ்.என். லட்சுமி, இன்னும் நூற்றுக்கும் மேற்பட்ட துணை

• படம்: ஸ்ரீஹரி

சிரிப்பு பொங்குது!

கு.ஞானசம்பந்தம்

நடிகர்கள், இத்தனை பேரையும் தன்னுடைய சிம்மக்குரலால் கட்டுப்படுத்திக் கொண்டிருந்த சந்தான பாரதி மற்றும் பலர்.

தரையிலும் மரத்திலும் கைப்பிடிச் சுவர்களிலும் எங்கும் நிறைந்திருந்த மனிதர்கள், நான் நின்றிருந்த மேடையிலும் ஏறத் தொடங்கினர். நேரம் ஆக, ஆகக் கூட்டம் அதிகமாகியது. என் பின்னாலிருந்த ஒருவர், ''இலேசா இவரைத் தள்ளி விட்டாப் போதும். மாட்டுக் கொம்புலதான் போயி விழுவாரு'' என்று சந்தோஷமாகச் சொல்லிக்கொண்டிருந்தார். அதிகாலையிலேயே நான் பேச வேண்டிய வசனங்களை எனக்குச் சொல்லிக் கொடுத்த கமல், ''நீங்க பாட்டுக்கு கிராமத்து ஸ்டைல்ல அடிங்க'' என்று சொல்லியிருந்தார். மேக்கப் போட்டு விட்டிருந்தபோது, பரீட்சைக்குப் படித்த மாணவன் மனப்பாடம் பண்ணியிருப்பதைச் சொல்லிப் பார்ப்பது போல நான் வசனங்களைச் சொல்லிப் பார்த்துக் கொண்டேன். ''எல்லாரும் அவங்க அவங்க இடத்துக்குப் போங்க'' என்ற அறிவிப்பு வந்ததும் ஜல்லிக்கட்டு மேடையிலே என்னை ஏற்றி விட்டார்கள்.

கதர்வேட்டி, கதர்சட்டை, கழுத்திலே துண்டு, கையிலே மைக். படத்தின் இயக்குநரான கமல் 'ஸ்டார்ட்' சொன்னவுடன் வெகு வேகமாக மாடுகள் ஓடிவர, கேமரா எனக்கு முன்னால் இயங்கத் தொடங்கியது. என் நினைவுகள் பின்னோக்கிச் சென்று, நான் பார்த்த முதல் சினிமாவை நினைவுபடுத்தின.

(ரீல் சுற்றும்)

## ஹா... ஹா... பரேஷன்!

நாடாளுமன்றத்தில் கேள்வி கேட்க லஞ்சம் பெற்ற எம்.பிக்களை 'ஆபரேஷன் துரியோதன்' துகிலுரித்துக் காட்டிய மாதிரி இனி நாட்டில் இப்படியும் சில 'ஆபரேஷன்கள்...'

அலுவலகத்தில் தூங்குகிறவர்களை ரெய்டு பண்ணுவது - 'ஆபரேஷன் கும்பகர்ணன்.'

கணவர்களை, மனைவிமார் ரெய்டு பண்ணுவது -'ஆபரேஷன் மாங்கல்யம்'

காதலர்களை, காதலிகள் ரெய்டு பண்ணுவது - 'ஆபரேஷன் அனார்கலி'

மருமகள்கள் மாமியாரை ரெய்டு பண்ணுவது - 'ஆபரேஷன் உமாபாரதி!'

மந்திரிகளை, முதலமைச்சர் ரெய்டு பண்ணுவது - 'ஆபரேஷன் சாட்டை!'

ஆட்சியில் பங்கு கேட்கும் தோழமைக் கட்சிகளை கூட்டணித் தலைமை ரெய்டு பண்ணுவது - 'ஆபரேஷன் பாண்டவாஸ்'

கட்சி அதிருப்தியாளர்களை, தலைமை ரெய்டு பண்ணுவது - 'ஆபரேஷன் அன்னை'

நடிகர்கள், நடிகைகள், டாக்டர்களை வருமான வரி இலாக்கா ரெய்டு பண்ணுவது- 'ஆபரேஷன் அலிபாபா'

- கேஜிஎஸ்



# ஐ.டி. டேட்டா!



(இணையம் மற்றும் தகவல் தொழில்நுட்ப உலகில் முக்கிய நிகழ்வுகளைச் சொல்லும் பகுதி.)

### பீட்டா விடைகள் :

நாம் கேட்பவற்றைத் தேடித் தரும் சர்ச் என்ஜின்கள் நிறைய உள்ளன. அதில் தேடினால் செய்திகள், தகவல்கள் மிகத் துல்லியமாகக் கிடைக்கலாம். ஆனால் சந்தேகங்களுக்கு விடை கிடைக்குமா என்றால் கொஞ்சம் யோசிக்கத்தான் வேண்டும். நமக்கு ஏற்படும் சந்தேகங்களுக்கு யாராவது விடையளித்தால் எவ்வளவு சௌகரியமாக இருக்கும். அதற்குத்தான் யாஹூ Answers புதிதாக வந்துள்ளது. தற்போது சோதனை ஓட்டம் (பீட்டா வெர்ஸன்) நடத்திக் கொண்டுள்ளது. உங்களுக்கு என்ன சந்தேகம் உள்ளதோ (உதாரணம் : 'லினக்ஸ், விண்டோஸை விட இயக்குவதற்குச் சுலபமாக இருக்குமா?', 'சோஷலிசம், கேப்பிட்டலிசம் - முக்கியமான வேறுபாடு என்ன?') அதைப் பற்றித் தாராளமாகக் கேட்கலாம். பிற யாஹூ வாடிக்கையாளர்களே அதற்குப் பதில் கொடுப்பார்கள். வந்ததில் எது சிறந்த விடை என ஓட்டுமளிக்கலாம். இணைய உலகில் நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளது யாஹூ ஆன்ஸர்ஸ்.



• பில்கேட்ஸ்



• ராமன்ராய்

### இலங்கையில் கால்பதிக்கும்...

இந்திய BPO (business process outsourcing)-ன் தந்தை என்றழைக்கப்படும் ராமன் ராய் தனது அடுத்த திட்டத்தை அறிவித்துள்ளார். விப்ரோவிலிருந்து விலகி 'ராமன் ராய் அசோசியேட்ஸ்' என தனியாக இயங்க ஆரம்பித்த ராமன் ராய், தற்போது $22 மில்லியன் செலவில் இலங்கையின் ஜான் கெல்ஸ் ஹோல்டிங்ஸ் லிமிடெட் உடன் இணைந்து அங்கே BPO செயல்பாடுகளைத் தொடங்க திட்டமிட்டுள்ளார். ''பத்து ஆண்டுகளுக்கு முன்பு இந்தியாவில் BPOவின் வளர்ச்சி எப்படி இருந்ததோ அப்படித்தான் இப்போது இலங்கையில் உள்ளது. இந்தத் திட்டம் இலங்கையில் மட்டுமல்ல ஆசியாவிலேயே BPO துறைக்குப் பெரும் வளர்ச்சியை ஏற்படுத்தும்''



# ஆனந்தத் திட்டு!

சூறாவளிச் சுற்றுப்பயணத்துக்கு ஏற்ற வகையில் ஒரு புது மாடல் காரை வாங்கவிருக்கிறார் சரத்குமார்.

“லேசா...லேசா... நீயில்லாமல் வாழ்வது லேசா...” - இதுதான் நடிகர் ராதாரவியின் செல்போன் ரிங்டோன்.

ஃபார்வர்டு பிளாக்கில் எதிர்பார்ப்பது கிடைக்காத பட்சத்தில் கார்த்திக் அகில இந்திய மூவேந்தர் முன்னணிப் பக்கம் சாய்ந்தாலும் சாய்ந்து விடுவார் என்கிறார்கள் அக்கட்சியினர்.

அ.தி.மு.க.வில் ஐக்கியமாகிவிட்ட ஆனந்தராஜுக்கு மேடைகளில் டாக்டர் ராமதாஸைத் திட்டித் தீர்ப்பது மட்டும்தான் மேலிடம் தந்த ஒரே அசைன்மென்ட்டாம்!

- கலை

# தகவல் பொங்குது!

என்கிறார் ராமன் ராய்.

### டாப் 10 வைரஸ்கள்

டாப் 10 மூவிஸ், பாடல்கள் என்று பார்த்துப் பார்த்தே பழகிப் போன உங்களுக்கு இந்தப் பட்டியல் கொஞ்சம் வித்தியாசமாக இருக்கும். கடந்த மூன்று மாதங்களில் இணைய உலகை வெற்றிகரமாக மிரட்டிக்கொண்டு இருக்கும் டாப் 10 வைரஸ்கள் இவைதான்.

1. Win32.Zafi.B@mm
2. Win32.Netsky.P@mm
3. Win32.Worm.Mytob.BI
4. Win32.Sober.AD@mm
5. Win32.Antiman.A@mm
6. Win32.Doombot.B@mm
7. Win32.Lovgate.V@mm
8. Win32.Antiman.Gen@mm
9. Win32.Worm.Mytob.C
10. Win32.Zafi.D@mm

### ப்ராடக்ட் :

2005-ல் இணைய உலகின் நெம்பர் 1 ப்ரௌஸர் எது தெரியுமா? இன்டெர்நெட் எக்ஸ்ப்ளோரரா? இல்லை, அந்தக் காலமெல்லாம் காணாமல் போய்விட்டது. வேறென்ன? அது - மொஸில்லா ஃபயர்பாக்ஸ்! 1995-ல் இருந்தே கோலோச்சிக் கொண்டிருந்த எக்ஸ்ப்ளோரரை, 1998-ல் இருந்து மெள்ளத் தட்டுத் தடுமாறி வளர்ந்த நெட்ஸ்கேப் நேவிகேட்டரால் ஒன்றும் செய்ய இயலவில்லை. ஆனால் வந்த வேகத்தில் ஃபயர்பாக்ஸ் முன்னணிக்கு வந்துவிட்டது. வைரஸ்கள் எல்லாம் மைக்ரோ சாஃப்ட்டின் இன்டெர்நெட் எக்ஸ்ப்ளோரரைக் குறி வைத்தே எழுதப்படுவதால் அதனை உபயோகிப்பவர்களின் எண்ணிக்கை குறைந்து விட்டது என்கிறார்கள்.

### வாய்ஸ் ப்ளேயர் :

பில்கேட்ஸ் :

“உங்கள் சேவையில் ஒரு சதவிகிதம் கூட திருப்தியடையாத வாடிக்கையாளரே உங்களுக்குக் கற்றுக் கொடுக்கும் சிறந்த ஆசிரியர்.”

- முகில்

**நா**டகம் பார்த்து விட்டதிலிருந்து நீலமணி எங்கள் ஜாகையில் அதைப் பற்றியே ஓயாமல் பேசிக் கொண்டிருந்தான். நாடகத்தில் நடித்தவர்கள் போல் நடித்துக் காட்டினான்; பாடியவர்களைப் போல் பாடிக் காட்டினான்; பேசியவர்களைப் போல் பேசிக் காட்டினான். எல்லாரும் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தோம் முக்கியமாக அந்த நாடகத்தில் கதாநாயகி வேஷம் போட்டவனைப் போல் நீலமணி பேசிப் பாடி நடித்துக் காட்டியது எங்களுக்கெல்லாம் ஒரே சிரிப்பை உண்டாக்கிக் கொண்டிருந்தது.

இப்படி நாங்கள் சிரித்துக் கொண்டிருந்த சமயத்திலே தான் நமச்சிவாயம் வந்து சேர்ந்தான். எல்லாரும் அவசரமாகச் சிரிப்பை அடக்கிக் கொண்டோம். நமச்சிவாயம், "என்ன, மாமா! நான் வரும்போது ஒரே சிரிப்பாயிருந்ததே!" என்று கேட்டான். "எல்லாம் உன்னுடைய பிரபாவத்தைப் பற்றித்தான்!" என்று பொதுப்படையாகச் சொன்னேன்.

நமச்சிவாயம் இதற்கு என்ன பதில் சொல்வது என்று தெரியாமல் சிறிது நேரம் விழித்துவிட்டு "நீங்கள் நாடகம் பார்க்க வந்ததற்கு ரொம்ப சந்தோஷம், மாமா! அதற்கு வந்தனம் செலுத்தவே வந்தேன். நாடகம் எப்படி இருந்தது? உங்களுக்குப் பிடித்ததா?" என்று கேட்டான்.

"நாடகம் நன்றாயிருந்தது. எனக்கு மட்டுமல்ல; என் குடும்பத்தார் எல்லாருக்கும் ரொம்ப ரொம்பப் பிடித்திருந்தது. ஆனால் ஏதோ புதுமையான நாடகம் என்று விளம்பரம் செய்திருந்தாயே; பழைய நாடகந்தானே?" என்றேன்.

"யார் சொன்னது? புதுநாடகந்தான், மாமா! எங்கள் கம்பெனி வாத்தியாரே புதிதாக எழுதியதல்லவா?" என்றான்.

"அது என்னமோ, அப்பா! உங்கள் வாத்தியாரே ஒரு வேளை 'காப்பி' அடித்து உன்னை ஏமாற்றி விட்டாரோ, என்னமோ? இந்த நாடகம் ஏற்கெனவே நான் பார்த்திருக்கிறேன். என் மகன் கூடப் பார்த்திருக்கிறாள். சந்தேகமிருந்தால் இதோ நிரூபித்துக் காட்டுகிறேன், பார்!" என்று சொல்லிவிட்டு நீலமணியைக் கூப்பிட்டு. "குழந்தை, நாம் இந்த நாடகத்தை முன்னால் ஒரு தடவை தஞ்சாவூரில் பார்த்திருக்கிறோமல்லவா? சில பாத்திரங்களைப் போல் நீ நடித்துக் காட்டு! அப்போதுதான் இவர் நம்புவார்" என்று சொன்னேன்.

முதலில் நீலமணி கூச்சப்பட்டாள். கொஞ்சம் தாஜா செய்த பிற்பாடு, இடீரென்று கூச்சத்தை உதறித் தள்ளிவிட்டு, 'பூலோக அற்புத அரம்பை'யில் யார் யார் எப்படிப் பேசினார்கள், பாடினார்கள், நடித்தார்கள் என்று கொஞ்சம் கொஞ்சம் செய்து காட்டினாள். கதாநாயகி வேஷம் போட்ட பையனைப் போல் நீலமணி நடித்துக் காட்டியபோது எங்களுடன் சேர்ந்து நமச்சிவாயமும் விழுந்து விழுந்து சிரித்தான்.





## கந்தப்ப பிள்ளை சொன்ன கதைகள் - 12



கதாநாயகனாக நடித்த நமச்சிவாயத்தைப் போல மட்டும் நீலமணி செய்து காட்டக் கண்டிப்பாக மறுத்துவிட்டாள்.

பழைய நாடகம் என்று நான் சொன்னது இந்தத் தமாஷுக்காகத்தான் என்பதை நமச்சிவாயம் ஆரம்பத்திலேயே தெரிந்து கொண்டான்.

விடை பெற்றுச் செல்லும்போது "மாமா! எங்கள் நாடகத்தில் எவ்வளவு குறைகள் இருக்கின்றன என்பதை இன்றைக்குத்தான் நன்றாக அறிந்தேன். ஆனால் என்ன செய்வது? கிடைக்கிற நடிகர்களைக் கொண்டு தானே நடத்த வேண்டியிருக்கிறது? ஆனால் ஜனங்களுக்கு என்னமோ பிடித்திருக்கிறது!" என்றான் நமச்சிவாயம்.

"அதுதான், தம்பி, வேண்டியது! மற்றது எப்படி இருந்தால் என்ன?" என்றேன் நான்.

நமச்சிவாயம் போன பிறகு நீலமணி "இது என்ன மாமா? இப்படி என்னைச் சந்தியில் இழுத்துவிட்டீர்கள்? அவர் என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள்வார் அதிகப் பிரசங்கி, அடங்காப் பிடாரி' என்றெல்லாம் எண்ணிக்கொண்டு போக மாட்டாரா?" என்று கேட்டாள்.

"எண்ணிக் கொண்டு போவது என்ன? உண்மையும் அப்படித்தானே? நீ அதிகப் பிரசங்கி-அடங்காபபிடாரிதானே? அதில் என்ன சந்தேகம்?" என்றேன் நான்.

வழக்கமாக நீலமணியிடம் பேசுகிறபடி வேடிக்கையாகத்தான் சொன்னேன். ஆனால் அவள் வழக்கம்போல் சிரித்துவிட்டுப் போகாமல், குப்புறப் படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கிவிட்டாள். "இது என்னடா வம்பு?" என்று எனக்கு வேதனையாகப் போய்விட்டது. அவளை ஒருவாறு சமாதானப்படுத்தினேன். அன்றிரவு நாங்கள் யாழ்ப்பாணத்துக்குப் புறப்பட்டு விட்டபடியால், அந்தச் சம்பவம் அதோடு போய்விட்டது என்று நினைத்தேன். ஆனால் அது போகவில்லை. விடாமல் எங்களைத் தொடர்ந்து வந்தது.

யாழ்ப்பாணத்திலேதான் நாங்கள் அதிக நாள் தங்கினோம். ஒரு கோயில் உற்சவம் முடிந்து இன்னும் ஓர் உற்சவத்திற்காகக் காத்திருந்த சமயத்தில் நமச்சிவாயம் வந்து சேர்ந்தான்; முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு வந்தான். கொழும்பில் நாடகம் நடத்திக் கொண்டிருந்த நமச்சிவாயம் கம்பெனியை யாழ்ப்பாணத்தார்கள் ஒரு 'ஸ்பெஷல்' நாடகத்துக்காகத் தருவித்திருந்தார்கள். வரும் வழியில் ஸ்திரீ வேஷக்காரனுக்கு சுரம் வந்துவிட்டது. அதைப் பற்றி வெளியில் சொன்னால் வேறுவிதமான இடைஞ்சல்கள் ஏற்படும். இந்தியாவிலிருந்து வந்தவர்களில் யாருக்காவது சுரம் வந்துவிட்டதாகத் தெரிந்தால், இலங்கையில் தொத்து



அமரர் கல்கி

வியாதிச் சிறைச்சாலையில் கொண்டு போய்ச் சேர்த்துவிடுவார்கள். அப்புறம் உயிர் பிழைத்து வெளியில் வருவதற்கு எவ்வளவு நாள் ஆகுமோ தெரியாது.

இந்த நிலைமையில் என்ன செய்வது? 'ஸ்பெஷல்' நாடகத்தை ரத்து செய்வதா? என்ன காரணத்தைச் சொல்லி ரத்து செய்வது? நாடகத்துக்கு அழைத்திருந்தவர்கள் ஏராளமாகப் பணம் செலவிட்டு விளம்பரப்படுத்தியிருந்தார்கள். அவர்களுக்குப் பண நஷ்டம். நமச்சிவாயத்துக்குப் பெயர் நஷ்டம்.

அழமாட்டாக் குறையாக இந்த விவரங்களையெல்லாம் நமச்சிவாயம் என்னிடம் சொன்னான்.

"நாளைக்குத்தானே, தம்பி நாடகம்? அதற்குள் ஸ்திரீ வேஷக்காரனுக்குச் சுரம் சரியாகிவிடுகிறது!" என்றேன்.

"அப்படித் தோன்றவில்லை, மாமா? நூற்றைந்து டிகிரி சுரம். மேடைக்கு வந்து மயக்கம் போட்டு விழுந்துவிட்டால் என் கதி என்ன ஆகிறது?" என்றான்.

"அதுவும் ஒரு நடிப்பு என்று வைத்துக் கொள்கிறது" என்று சொல்லிவிட்டு நகைத்தேன்.

நமச்சிவாயத்துக்கு நகைப்பு உண்டாகவில்லை. அழுகையும் ஆத்திரமுந்தான் வந்தன.

அச்சமயத்தில் என் நாவில் எந்தக் குட்டிச் சாத்தான் வந்து உட்கார்ந்து கொண்டதோ, என்னமோ தெரியவில்லை.

"நம் நீலமணியை வேண்டுமானால் நடிக்கச் சொன்னால் போகிறது!" என்றேன்.

உடனே நமச்சிவாயத்தின் முகம் மலர்ந்தது. "தங்களிடம் அதைக் கேட்கலாமென்றுதான் வந்தேன். ஆனால் கேட்பதற்கு என்னவோ தைரியம் வரவில்லை" என்றான்.

எனக்குத் தூக்கிவாரிப்போட்டது. தமாஷ் பேச்சு சில சமயம் எவ்வளவு இக்கட்டுகளில் கொண்டுவந்து விட்டு விடுகிறது!

அதிகம் வளர்த்துவதில் பயனில்லை. நமச்சிவாயம் தான் வந்த காரியத்தை நிறைவேற்றிக் கொண்டுதான் போனான்.



தமிழ்நாட்டிலிருந்து வந்தவர்கள் கச்சேரி செய்வதாகவோ, நாடகம் போடுவதாகவோ இலங்கையில் விளம்பரம் செய்து விட்டு, அப்படி நடக்காமற் போனால் தமிழ்நாட்டுக் கலைஞர்கள் எல்லாருக்குமே கெட்ட பெயர் உண்டாகும். இம் மாதிரி சில முறை இலங்கையில் நடந்து, தமிழ்க் கலைஞர்கள் கெட்ட பெயர் வாங்கியிருக்கிறார்கள். ஆகையால் இவ்வளவு விளம்பரம் செய்த பிறகு நாடகம் நடந்தால் தான் நல்லது என்பதைப் பற்றிச் சந்தேகமில்லை. நமச்சிவாயத்துக்கு ஏதாவது ஒத்தாசையாயிருப்பதில் எனக்கும் திருப்திதான். ஆனால் நீலமணியை நாடக மேடை ஏறி நடிக்கச் செய்யலாம் என்கிற எண்ணம் அந்த நிமிஷத்துக்கு முன்னால் என் கனவிலே கூடத் தோன்றியதில்லை.

நீலமணியிடம் இதை நாங்கள் தயங்கிப் பிரஸ்தாபித்ததும், அவள் ஒரு நிமிஷ நேரங்கூட தாமதிக்காமல் சம்மதித்தது என்னை ஆச்சரியத்தில் மூழுக அடித்துவிட்டது. கொழும்பில் வேடிக்கையாக நடித்துக் காட்டச் சொன்னபோது அவள் தயங்கிய அளவுகூட இப்போது தயங்கவில்லை. பூர்வ ஜென்ம வாசனை என்று இதைத்தான் சொல்லுகிறார்கள் போல் இருக்கிறது. அவளுடைய உடம்பிலும் உயிரின் ஒவ்வோர் அணுவிலும் நாடகக் கலையின் ஜீவசக்தி ததும்பித் துடித்துக் கொண்டிருக்க வேண்டும். இல்லாவிடில், ஒரு வருஷ காலத்திற்குள்ளே தமிழ் நாடெங்கும் 'சின்ன பாலாமணி' என்று பெயர் வாங்கியிருக்க முடியுமா?

உடனே ஒத்திகையும் ஆரம்பமாகி விட்டது. பாட்டு கூத்து இம்மாதிரி காரியங்களில் நீலமணிக்கு அபார



மான ஞாபக சக்தி உண்டு. இப்போதோ அவளுக்கு ஒரு புது ஆவேசம் உண்டாகியிருக்கிறது. ஒருபகல் ஒரு ராத்திரி ஒத்திகையில் எல்லாவற்றையும் பாடம் செய்து விட்டாள். நூறு தடவை அந்த நாடகத்தில் நடித்தவள் போல் அவ்வளவு இயற்கையாகப் பாடவும், பேசவும செய்தாள். நடிப்போ அவளுக்கு இயற்கையாக வந்தது.

ஒத்திகையில் திருப்திகரந்தான்; மேடையில் ஏறிப் பெரிய ஜனத்திரளைப் பார்த்தவுடன் பயந்து போகாமல் இருக்க வேண்டுமே என்று எனக்குத் திக்கு திக்கு என்று அடித்துக் கொண்டிருந்தது. ஆனால் நாடகத்தில் திரை தூக்கிச் சிறிது நேரத்திற்குள்ளேயே என் பயம் தீர்ந்துவிட்டது. நீலமணியிடம் சபைக் கூச்சம் என்பதே தென்படவில்லை. சபையில் கூடியிருந்த யாழ்ப்பாணத்து பொறுக்கி எடுத்த ரஸிகர்களோ ஆண்பிள்ளை பெண் வேஷம் போட்டுக் கொண்டு வந்து நடிப்பதற்குப் பதிலாக ஒரு பெண்ணே கதாநாயகியாக நடிக்கிறாள் என்று தெரிந்தவுடனேயே கரகோஷத்தின் மூலம் தங்கள் உற்சாகத்தைக் காட்டிவிட்டார்கள். அப்புறம் நீலமணி மேடைக்கு வரவேண்டியதுதான். சபையிலே ஒரே ஆரவாரம் எழுந்தது. போகப் போக நீலமணியின் உற்சாகம் அதிகமாகி வந்தது. நாடகம் யாரும் எதிர்பாராத அளவில் அமோகமான வெற்றியுடன் முடிந்தது.

மறுநாள் நமச்சிவாயம் என்னிடம் வந்து "மாமா! என் மானத்தைக் காப்பாற்றினீர்கள்!" என்று காலைத் தொட்டுக் கண்ணில் ஒத்திக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். பற்பல விதமாகத் தனது நாடகத் திறமையையெல்லாம் காட்டி எனக்கும் நீலமணிக்கும் நன்றி செலுத்திவிட்டு கொழும்புக்குப் பிரயாணமானான். வழக்கமாக ஸ்திரீ வேஷம் போடுகிற பையனுக்கு சுரம் இறங்க ஆரம்பித்துவிட்டது என்று தெரிந்த நானும் மன நிம்மதி அடைந்தேன். யாழ்ப்பாணத்தில் என்னுடைய கச்சேரிகள் முடிந்ததும் ஊருக்குத் திரும்பினேன்.



நீலமணியின் வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன் அல்லவா? அந்தக் கவலை என் மனத்திலிருந்து தீர்ந்து போய் விட்டது நீலமணி விரைவில் என் பொறுப்பிலிருந்து போய் விடுவாள் என்று நிச்சயம் செய்து கொண்டேன். அந்தப்படியே நடைபெறவும் செய்தது. ஆனால் அன்று எழுதிய எழுத்தை அழித்து எழுத வல்லவர் யார்? சில காலம் வரைக்குத்தான் நான் நீலமணியை மறந்து அவளைப் பற்றிய கவலை அதிகம் இல்லாமல் இருக்க முடிந்தது.

சீக்கிரத்திலேயே நமச்சிவாயம் அய்யம் பேட்டையில் என்னுடைய வீடு தேடி வந்து சேர்ந்தான். அவன் வந்த சமயம் நான் வீட்டில் இல்லை. நமச்சிவாயமும் நீலமணியும் ஒருவாறு பேசி முடிவு செய்து கொண்டு என்னிடம் சம்மதம் கேட்பதற்காகக் காத்திருந்தார்கள் என்று தோன்றியது.

நமச்சிவாயம் கம்பெனியில் பிரதான ஸ்திரீ வேஷம் போட்டு வந்த பையன் சண்டை பிடித்துக் கொண்டு போய்விட்டானாம். நீலமணியுடன் நடித்த பிறகு வேறு யாருடனும் நடிப்பதற்கு நமச்சிவாயத்துக்கும் பிடிக்கவேயில்லையாம். இப்படி அப்படி என்று ஏதேதோ சுற்றி வளைத்துச் சொல்லிக் கொண்டு போனான்.

அவனுடைய பேச்செல்லாம் எனக்குத் தேவையாயிருக்கவில்லை. ஏற்கெனவே நன்றாக யோசித்து ஒரு முடிவுக்கு வந்திருந்தேன். 'இந்தப் பெண்ணுக்கு கலியாணம் பண்ணி வைப்பதென்பது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. இவள் சாதாரணக் குடித்தனக்காரப் பையன் ஒருத்தனைக் கலியாணம் செய்து கொண்டு அவனுக்குச் சமையல் செய்து

போட்டுக் கொண்டு வீட்டில் நிம்மதியாக வாழக் கூடியவனும் அல்லன். இவளை இப்படியே வெகுகாலம் கலியாணம் இல்லாமல் என் வீட்டில் வைத்துக் கொண்டிருக்கவும் முடியாது. ஆகையால் கடவுளே பார்த்துத்தான் எங்களை அச் சமயம் இலங்கைப் பிரயாணம் அனுப்பி வைத்திருக்க வேண்டும். நீலமணியை நமச்சிவாயத்தின் கையில் பிடித்துக் கொடுத்து அனுப்பிவிட வேண்டியது தான். நமச்சிவாயமும் அறிவாளியான பிள்ளை. அப்படியொன்றும் ஒழுக்கம் கெட்டவன் என்று பெயர் வாங்கவில்லை. அவனுடைய நாடகக் கம்பெனியில் சேர்ந்துவிட்டால் சீக்கிரத்தில் ஒரு நாள் இவர்களுக்குத் திருமணம் நடந்துதான் தீரும். கலியாணத்துக்குப் பிறகு இவளை நாடக மேடையில் ஏற்றி நடிக்கச் செய்வானா என்பது அவர்கள் இருவரையும் பொறுத்த காரியம். அவ்வளவு தூரத்துக்கு நான் இப்போது அதைப் பற்றி யோசித்துக் கொண்டிருப்பானேன்? தெய்வ சித்தத்தின் படி நடந்து விட்டுப் போகிறது...'

இவ்வாறு மனத்தில் எண்ணிக் கொண்டு, முதலில் கொஞ்ச நேரம் ஆட்சேபித்தேன். பிறகு "நீலமணி இஷ்டப்பட்டால் சரிதான்; நான் குறுக்கே நிற்கவில்லை" என்றேன். கடைசியில் என்னுடைய சம்மதத்தையும் கொடுத்தேன்.

நமச்சிவாயத்தைத் தனிமையில் அழைத்து "விலையில்லாத பொக்கிஷத்தை உன்னிடம் ஒப்புவிக்கிறேன். அதைப் போற்றிப் பாதுகாப்பது உன் கடமை. அவசரப்பட்டு ஒரு தீர்மானத்துக்கும் வந்து விடாதீர்கள். கொஞ்ச நாள் நாடக மேடையோடு உங்கள் உறவு இருந்து வரட்டும். ஐந்தாறு மாதத்துக்குப் பிறகு இரண்டு பேரும் பரிபூரணமாக இஷ்டப்பட்டால் கலியாணம் செய்து கொள்ளுங்கள். அதுவரையில் என் வயதான தமக்கையை நீலமணியுடன் அனுப்பி வைக்கிறேன். அவர்கள் தனி ஜாகையில் வசிக்க வேண்டும். நானும் அடிக்கடி வந்து உங்களைப் பார்த்துக் கொண்டிருப்பேன்" என்றேன்.

நமச்சிவாயத்துக்கு அப்போதிருந்த பரவசத்தில் நான் எது சொன்னால் தான் ஆட்சேபிக்கப் போகிறான்? எல்லா நிபந்தனைகளையும் ஒப்புக் கொண்டான்.

(தொடரும்)



## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

**வி**ஷ்ணு சஹஸ்ரநாமத்தின் ஆரம்பத்திலேயும் நரசிம்ஹ அவதாரம்தான்; கடைசியிலேயும் - சர்வப்ரஹரணாயுத : - என்று நரசிம்ஹ அவதாரம்தான். கடைசி திருநாமம் சர்வப்ரஹரணாயுத: இதற்கு ஆதி சங்கர பகவத் பாதாள் பாஷ்யம் இயற்றுகிறபோது சொல்கிறார் : 'எம்பெருமானுக்கு எல்லாமே' ஆயுதம் என்கிறார். நரசிம்ஹனாக அவன் அவதாரம் பண்ணியபோது, அவன் நகங்களே அவனுக்கு ஆயுதமாகின அல்லவா! ஆகவே ச்ரவப்ரஹரணாயுத : என்ற நாமம் நரசிம்ஹனையே குறிக்கும் என்கிறார் பகவத் பாதாள்.

சஹஸ்ரநாமத்தின் இடையிலேயும் நரசிம்ஹ பிரபாவமே வருகிறது. ஒரு கிரந்தத்தைக் கொடுத்து அதனுடைய தாத்பர்யத்தைக் கேட்டால், முதலில் வருவதைப் பார்க்க வேண்டும், கடைசியில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்று பார்க்க வேண்டும். இடையிலே கொஞ்சம் பார்க்க வேண்டும். இப்படிப் பார்த்தால் அதன்

# குறையொன்றுமில்லை

## ஆன்மிகம் சிறக்குது!



தாத்பர்யத்தை நாம் சொல்லலாம். இப்படிப் பார்க்கிறபோது சஹஸ்ரநாமத்தின் ஆயிரம் திருநாமங்களுக்கும் பொருளாக இருக்கக்கூடியவன் யார் என்று கேட்டால் அந்த நரசிம்ஹன்தான்.

அப்படிப்பட்ட நரசிம்ஹன் திருவடியிலே ஆத்ம சமர்ப்பணம் நாம் பண்ணினோமானால், மறுபடியும் நமக்குப் பிறவியே கிடையாது.

முமுக்ஷுபாத்ய தேவதை என்று பெயர் நரசிம்ஹனுக்கு. மோக்ஷத்தை விரும்பக் கூடியவர்கள் உபாஸிக்க வேண்டிய மூர்த்தி லக்ஷ்மி நரசிம்ஹன். எங்கு நாம் பார்த்தாலும் மடங்களிலே நரசிம்ஹ அவதாரம்தான். அந்த நரசிம்ஹனை ஆராதிப்பது மிகவும் சிரமமான காரியம். பரமாத்மா தன்னுடைய ஆராதனத்துக்கு சன்னியாசிகளையே வரித்தான். ஏனென்றால், மற்ற விஷயங்களிலே பற்றை அறுத்துக் கொண்டு, அவனிடத்திலே மட்டும் ஈடுபாடு கொண்டு, அவன் திருவடியிலே நித்ய கைங்கர்யம் பண்ணவேண்டுமென்பதாலே. அவனுடைய மந்திரத்துக்கு மஹா மந்திரம் என்று பெயர் மந்திர ராஜம் என்றும் பெயர் அதற்கு. அப்படி மந்திரத்துக்கெல்லாம் உயர்ந்த மந்திரமாக விளங்கக் கூடிய நரசிம்ஹனுடைய பெருமை, எல்லா சாஸ்திரங்களிலேயும் பரக்கப் பேசப்படுவதினாலே, அவனை ஆராதிக்கக் கூடிய தகுந்த அதிகாரிகளை, பரமாத்மா தானே வரித்து, தன்னுடைய ஆராதனத்தை நடத்திக் கொள்கிறான்.

லோபமில்லாமல் அவன் திருவாராதனத்தை நடத்த வேண்டும். நிறைய சாப்பிடக்கூடியவன் அவன்! நரசிம்ஹ

### எட்டாம் பாகம் 1

னுக்கு நிறைய நிவேதனம் பண்ண வேண்டும். 'பெரிய பெரிய பெருமாள்' என்று அவனுக்குப் பெயர்! பெரியவனுக்குப் பெரியவன்! பெருமாள்களால் ஆராதிக்கப்பட்டவன் என்பதனாலே பெரிய பெரிய பெருமாள் என்று அவன் பேசப்படுகிறான்.

'பெருமாள்களால்' என்பதால் பகுவசனம் - (பன்மை). ராமபிரான் அஹோபில க்ஷேத்திரத்துக்குச் சென்று வணங்கி, தோத்திரம் பண்ணினான் நரசிம்ஹனை. அந்த ஸ்தோத்திரத்துக்கு, 'பஞ்சாமிர்த ஸ்தோத்திரம்' என்று பெயர். ஸ்தோத்திரம் பண்ணி, நல்ல பலத்தைப் பெற்று சீதையை மீட்டான். ராவணனை ஜெயித்தான்.

ஹரிவம்சம் என்கிற உயர்ந்த கிரந்தமானது இதை எடுத்துக்காட்டுகிறது.

அஹோபில க்ஷேத்திரத்தில் ராமனால் ஸேவிக்கப்பட்டவன் நரசிம்ஹன். அதே க்ஷேத்திரத்தில் இருக்கும்படியான எம்பெருமானை, ஸ்ரீநிவாஸன் கல்யாண காலத்திலே ஆராதித்தான் - பத்னி பத்மாவதியோடு வந்து ஆராதித்தான். திரவியங்களும், கல்யாணத்துக்காகப் பண்ணி வைக்கப்பட்ட அத்தனை பதார்த்தங்களும், அஹோபில க்ஷேத்திரத்தில் இருக்கும்படியான நரசிம்ஹனுக்கு நிவேதனம் பண்ணப்பட்டது! இதை பகவான் ஸ்ரீநிவாஸனே பிரும்மாவுக்கு ஆக்ஞாபித்துப் பண்ண வைத்தான். பிரும்மாண்ட புராணத்திலே வேங்கடசால மஹாத்மியத்திலே எல்லோரும் இதைப் பார்க்கலாம்.

ஸ்ரீநிவாஸன் மணவறையிலே மாப்பிள்ளையாக உட்கார்ந்திருக்கிறபோது பிரும்மா வந்தார். பதார்த்தங்களையெல்லாம் மலை மலையாகக் குவித்து வைத்திருக்கிறது மடைப்பள்ளியிலே. மகான்களான மஹரிஷிகளெல்லாம் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அதை யாருக்கு நிவேதனம் பண்ணுவது என்று தெரியவில்லை பிரும்மாவுக்கு!

அப்போது, மாப்பிள்ளை கோலத்திலே உட்கார்ந்திருக்கும் பகவான் ஸ்ரீநிவாஸனிடத்திலே போய்க் கேட்கிறார் பிரும்மா. ஸ்ரீநிவாஸன் சொல்கிறான் :

'அஹோபில க்ஷேத்திரத்தில் இருக்கும்படியான அந்த நரசிம்ஹனுக்கு யதாவிதியாக (முறைப்படி) பூஜை பண்ணி, இந்த திரவியங்களெல்லாம் விநியோகிக்கப்படட்டும்' என்று சொல்கிறான்.

அந்த ஸ்ரீநிவாஸ தம்பதிகள் அஹோபிலம் சென்று நரசிம்மனை ஸேவித்தார்கள்.

அதனால்தான் நித்யஸ்ரீயோடு, நித்ய கல்யாண வைபவனாக அந்த ஸ்ரீநிவாஸன் என்றும் விளங்குகிறான். இவ்வளவு பெருமை அந்த திருவேங்கடமுடையானான ஸ்ரீநிவாஸனுக்கு ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால், அதற்குக் காரணம் என்ன...? நரசிம்ஹ ஆராதனத்தினுடைய பெரும் பயன்தான்.

அப்படிப்பட்ட பெருமைமிக்கவன், இரண்டு பெருமாள்களால் ஆராதிக்கப்பட்டவன் என்று ஆசார்யர்களால் எடுத்



''ஆபிசுல தூங்கினதுக்கா மானேஜர் மெமோ குடுத்தார்?''

''தூக்கத்துல அவரைப் பத்தி தப்பா உளறினத காது கொடுத்து கேட்டுட்டார்!

- அம்பை தேவா

''மன்னா! இன்னைக்கு நம்மளோட போர் புரிய வர்றதா இருந்த எதிரி நாட்டு மன்னன் நாளைக்கு வர்றதா தகவல் வந்திருக்கு!''

''ஏனாம்!''

''இன்னைக்கு கிரிக்கெட் இருக்காம்!''

- எஸ்.சரவணன்



துக்காட்டப்பட்டவன் என்பதனாலே பெரிய பெரிய பெருமாள் என்று அவன் பெயர் பெறுகிறான். இந்த நரசிம்ஹனுடைய பெருமைதான் சஹஸ்ர நாமத்திலே பேசப்படுகிறது.

**யோ**கிகளுக்கு அந்த நரசிம்ஹன் ஹ்ருதயத்திலே தியானம் பண்ணக் கூடியவனாக விளங்குகிறான். வெறும் நரசிம்ஹனை தனித்து தியானம் பண்ணக்கூடாது. உக்ர ரூபியாக தியானம் பண்ணக் கூடாது. யக்ஞத்திலே கூட அப்படிப் பண்ணுவதில்லை. அந்த லக்ஷ்மியோடு கூடியிருக்கும்படியான லக்ஷ்மி நரசிம்ஹனாகத்தான் அவனை உபாஸிக்க வேண்டும். ஜபம் பண்ணுகிற போதும் தியானம் பண்ணுகிறபோதும் லக்ஷ்மியோடு கூடியிருக்கும்படியான நரசிம்ஹனை உபாஸித்தோமானால் பரம மங்களம் நமக்கு ஏற்படும்.

மாங்கல்ய ஸ்தவம் என்கிற ஸ்தோத்திரத்திலே (இனமும் ஸ்த்ரீகள் இதைச் சொல்ல வேண்டும் - புருஷர்களும் சொல்ல வேண்டும்) இந்த நரசிம்ஹன் யார் என்பது சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தோத்திரத்தைச் சொன்னால் என்ன ஆகிறது...

த்ரவந்தி தைத்யா : தைத்யர்களெல்லாம் ஓடி விடுகிறார்கள். அசுர ப்ரவ்ருத்திகள், துஷ்ட ப்ரவ்ருத்திகளெல்லாம் இருக்கிற இடம் தெரியாமல் ஓடுகிறார்கள்.

ப்ரணவந்தி தேவதா : இதைச் சொல்லக்கூடியவர்களிடத்திலே, இந்திராதி தேவதைகளெல்லாம் வந்து கையைக் கட்டிக்கொண்டு நிற்கிறார்களாம் - நீங்கள் என்ன சொன்னாலும் கேட்கிறோம் என்று நிற்கிறார்களாம்! இப்படி மாங்கல்ய ஸ்தவத்தைச் சொல்பவர்களுக்கு, தேவதைகளெல்லாம் கிங்கரர்களாக வந்து நின்று காத்திருக்கிறார்கள்.

நச்யந்தி ரக்ஷாந்தி - ராக்ஷஸர்களெல்லாம் நாசனத்தை அடைகிறார்கள். 'ராக்ஷஸர்களெல்லாம் இப்போது பூலோகத்தில் இல்லையே, எப்போதோ துவாபர யுகத்திலே அல்லவா இருந்தார்கள்... திரேதா யுகத்திலே இருந்தார்கள். கலியுகத்திலே இல்லையே?' என்று கேட்கலாம்.

அதற்கு சாஸ்திரம் சொல்கிறது - அப்போதெல்லாம் தனித்து ராக்ஷஸர்கள் இருந்தனர் என்று புராணத்திலே சொல்லப்பட்டிருக்கிறது - இப்போது மனிதனே ராக்ஷஸனாக இருப்பதனாலே பிரத்யேகமாக ராக்ஷஸர்கள் வேண்டிய தில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது! இந்த மாங்கல்ய ஸ்தவத்தைச் சொல்வானேயானால் ஒருத்தனிடத்திலே இருக்கக்கூடிய ராக்ஷஸ குணமெல்லாம் அழியும்; அவனை அண்டக்கூடியவர்களின் ராக்ஷஸ குணமும் அழியும் என்பது பலன்.

(வளரும்)

# பலூன், பட்டாசு, பார்ட்டி!

'கலர் கலர் பலூன் - காதைக் கிழிக்கற விசிலு - கல கல கானாப்பாட்டு - டமால் டுமீல் பட்டாசு - டாஸ்மாக்கு - டிஸ்கொதே'ன்னு செம கலகலப்பா 2006க்கு வெல்கம் பார்ட்டி கொடுத்தாங்கப்பு சென்னை மக்கள். நம்ம கமிஷனரு நடராஜ் சாரு வேற ஆடக்கூடாது - பாடக்கூடாதுன்னு ஏகப்பட்ட தடா போட்டிருந்ததால பசங்கலாம் ரொம்பவே மூட்அவுட் ஆயிருந்தாங்க. என்ன நினைச்சாரோ தெரியல. 'போனாப் போகட்டும் பசங்க'ன்னு திடீர்னு கருணைகாட்டி எல்லா தடாவையும் வாபஸ் வாங்கி எல்லார் மனசுலயும் சந்தோஷத்தை ரிட்டன் கொண்டு வந்துட்டாரு.

இதுபோதாதா நம்ம ஆளுங்களுக்கு... வெளுத்து வாங்கிட்டாங்க. பெசண்ட் நகர் பீச்சு, மெரீனா பீச்சு, மௌண்ட் ரோடு... ஈசிஆர் ரோடு பழைய மகாபலிபுரம் ரோடுன்னு ஒரு இடம் விடாம எங்க பார்த்தாலும் பசங்க கூட்டம் கூட்டமா ஜ மீன் ஜோடி ஜோடியா தலையில ரிப்பனு கையில பலூனுன்னு டூவீலர்ல எல்லாம் செம சவுண்டு பார்ட்டிகளா மாறி அலம்பல் பண்ணிட்டாங்க.

சிட்டில புது வருஷம் கொண்டாட ரோட்டுல கூடுன யூத்துங்களுக்குச் சமமா நம்ம போலீஸ்காரங்களும் தூக்கத்தை விட்டுட்டு வந்திருந்தாங்க. எல்லா ராக்கூத்தையும் வேற வழியில்லாம ரொம்ப அமைதியா கவனிச்சுக்கிட்டு இருந்தாங்க. ஆனாலும் பசங்களை ரொம்ப தொந்தரவு பண்ணாம ஃப்ரீயா விட்டுருந்தாங்க. கமிஷனரே வந்து காந்தி சிலை முன்னால கேக் வெட்டி மக்களோட மக்களா புதுவருஷம் கொண்டாடினார்னா பார்த்துக்கோங்களேன்..

அதே சமயம் ஒரே வண்டியில நாலஞ்சு பேரு ஏறிக்கிட்டு சவுண்டு விடற மற்றும் பொண்ணுங்களைக் கலாய்க்கற பார்ட்டிகளை இலேசா கவனிச்சுத்தான் அனுப்பினாங்க. இப்படித்தான் ஹிக்கின் பாதம்சுக்கு எதிர்ல பஸ்ஸ்டாப்புல நின்னுகிட்டு இருந்த ஜோடியை நம்ம பசங்க ஹேப்பி நியூ இயர் சொல்றேன்னு அலம்பல் பண்ண ஒரு வழியா போலீஸ் வந்து இரண்டு

விஸிட்



- ஒற்றன்





தட்டு தட்டி அனுப்பிச்சாங்க.

புது வருஷத்துல பீச்கல மட்டும் கூட்டம் கூடலப்பு திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலு... மயிலாப்பூரு கபாலீஸ்வரர் கோயிலு. மத்ய கைலாஷ் கோயிலுன்னு எல்லாமே அர்ச்சனை - ஆசீர்வாதம்னு ரொம்பவே ஜெகஜ்ஜோதியா இருந்துச்சு. அர்த்தராத்திரில செம கலெக்‌ஷனையும் அள்ளிட்டாங்கப்பு.

அதேபோல சிட்டிபூரா இருக்குற எல்லா கிளப்லயும் டிஸ்கொதே-பார்ட்டின்னு செம ராக்கூத்து. என்னதான் போலீஸ் பர்மிஷன் கொடுத்திருந்தாலும் இந்த அளவுக்கு ஆட்டம் போடக்கூடாதுப்பு. ஆமா, பத்திரிகைகாரங்க என்னப்பா துரோகம் செஞ்சது உங்களுக்கு. ஒரு சில கிளப்புகளைத்தவிர வேற எதிலயும் உள்ளே விடல. ச்சே. எத்தனை பத்திரிகைக்கு கவர் ஸ்டோரி மிஸ் ஆயிடிச்சு!

மணி பன்னிரண்டைத் தாண்டினது தான் தாமதம். இத்தனை நேரம் பல்லைக் கடிச்சுக்கிட்டு நின்ன போலீஸ் அடுத்த நிமிஷமே எல்லாரையும் வீட்டுக்குத் துரத்த ஆரம்பிச்சுட்டாங்க. ஒரு ஆளும் ரோட்டுல நிக்க முடியல. திருப்பதி கோயில்ல ஜருகண்டி.... ஜருகண்டி...னு சொல்வாங்களே... அந்த ரேஞ்சுக்கு விரட்டியடிச்சுட்டுத்தான் மறு வேலை பார்த்தாங்க.

இரண்டு மணிக்கெல்லாம் கிட்டத்தட்ட சென்னையே காலியாயிடிச்சு. அந்த அளவுக்கு போலீஸ் ரொம்ப வேகமா இருந்தாங்க. வீடு போறதுக்கு ஆட்டோ-ஷேர் ஆட்டோக்களுக்கு செம கிராக்கிப்பு.

சரி, கடைசியா ஒரு வார்த்தை லேட்டா சொன்னாலும் லேட்டஸ்டா சொல்லிக்கிறேன். ஹாப்பி 2006!

படங்கள் : **ஓம்**



**‘உன் கண்ணில் நீர் வழிந்தால், என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி.’ நெஞ்சைக் கரைய வைத்த திரைப்படப் பாடல். மாறாக, ஒரு சிறுமியின் இரு விழிகளில் இருந்தும் சின்னஞ்சிறு கற்கள் உதிர்ந்து கொண்டேயிருந்தால்...**

# கற்களை உதிர்க்கும் கண்கள்!

எஸ்தர் டெய்சி ராணிக்கு வயது பதினொன்று. பெரம்பலூர் மாவட்டம் வரதராஜன் பேட்டை கிராமம். அங்கு மேல்நிலைப்பள்ளி ஒன்றில் ஆறாம் வகுப்புப் படித்து வருகிறாள். வகுப்பறையில் ஒரு நாள் பாடம் கேட்டுக் கொண்டிருந்த சமயத்தில் முதலில் கண்கள் இலேசாக சிவக்கத்தொடங்கியுள்ளன. சிறிது நேரத்தில் கண்களிலிருந்து இரண்டு சிறு கற்கள் உதிர்ந்து கீழே விழுந்துள்ளன. அதைப் பார்த்த எஸ்தருக்கும், அருகிலிருந்த மற்ற பிள்ளைகளுக்கும் அதிர்ச்சி. ஆச்சர்யம்.

வீட்டுக்கு வந்து அம்மா ரெஜினா மேரியிடம் கூற, அவரோ அதிர்ச்சியில் உறைந்து போகிறார்.

“என் புருஷன் செத்ததுக்கப்புறம், இந்த நாலு பிள்ளைங்களையும் வளர்க்கவே ரொம்பக் கஷ்டப்படறேங்க. டெய்ஸிதான் மூத்த பொண்ணு. ஒரு நா, கண்ணுல இருந்து கல்லுகல்லா விழுதுனு வந்து சொன்னா. நான் நம்பலை. ஒரு நாள், வீட்டுல நான் பார்த்துக்கிட்டே இருக்கும் போதே கல்லு விழவே, பதறிப் போனேன். உடனே பக்கத்துல இருக்கிற அரசினர் ஆரம்ப சுகாதார நிலையத்துல காட்டினோம். விருதாச்சலத்துக்குக் கூட்டிட்டுப் போகச் சொன்னாங்க. அங்க இருக்கிற கண் டாக்டர், டெஸ்ட் எல்லாம் பண்ணிட்டு, சொட்டு மருந்து போட்டு அனுப்பினாரு. ஆனா, கல் விழறது மட்டும் நிக்கலைங்க” என்றார் ரெஜினாமேரி வருத்தத்துடன்.

இது வரை சுமார் 115 கற்கள் எஸ்தரின் கண்களிலிருந்து விழுந்துள்ளன. இரண்டு மில்லி கிராம் முதல் மூன்று கிராம் வரை எடையுள்ள சின்னஞ்சிறு கற்களின் மொத்த எடை கிட்டதட்ட கால் கிலோ.

இந்த நிலையில் எஸ்தருக்கு ஆதரவுக் கரம் நீட்டியது, திருச்சி ஏ.ஜி. கண் மருத்துவமனை. எஸ்தரை, திருச்சிக்கு அழைத்து வந்து ஐந்து நாட்கள் தங்க வைத்து பலவிதமான பரிசோதனைகள் செய்துள்ளார்கள்.

எஸ்தரின் கண் பார்வை படலம் சரியாக உள்ளது. கிட்டப்பார்வை, தூரப்பார்வை எல்லாம் நார்மல். பார்வை நரம்புகளிலும் பாதிப்பு இல்லை. பொதுவாகக் கண்களின் இமைப் பகுதியில்

• ஜி.ஜி.அனந்தராஜா



நீர்ப்பை ஒன்று அமைந் திருக்கும். கிட்னி போன்ற மனித உடல் பாகங்களில் சிறு நீரகக் கல் உருவாகு வது போல, இவ் வகைக் கல்லும் உரு வாக வாய்ப்புள்ளதா என்பதை அறிய, பரி சோதித்துள்ளார்கள். அந்தக் கற்கள் யூரியா அல்லது கால்ஷியத் தினால் உருவானதாக இருந்தால் ஆக்டினோ மைக்கோசிஸ் என்ற கலவையாக இருக் கும். ஆனால், இந்தக் கற்களில் இருந்ததோ சிலிக்கான். சிலிக்கான் சாதாரணமாக மண்ணில் கிடக்கும் கல் போன்றது என்பதால் மருத்துவர்கள் குழம்பிப் போய் விட்டனராம்.

கடந்த 23.12.2005 வெள்ளிக் கிழமையில் இருந்து எஸ்தருக்கு மருத்துவமனையில சொட்டு மருந்து ஊற்றப்பட்டு வந்திருக் கிறது. இது போன்ற சிகிச்சைகளுக்கு இடையிலும் கடந்த 25.12.05 ஞாயிறு அன்று அவளது கண்களிலிருந்து கற்கள் விழத் தொடங்கின. இதற்கு முன்னர் உதிர்ந்ததோ கறுப்பு நிறக் கற்கள். தற் போது விழுந்ததோ வெளிர் சிவப்பு நிறக் கற்கள். கற்களைத் தொடர்ந்து சிவப்பு நிறத்தில் ரப்பர் துண்டு ஒன்றும் விழுந் துள்ளது. இந்தக் கற்கள், ரப்பர் துண்டு



* தாயுடன் எஸ்தர்

அனைத்தும் திருச்சியில் உள்ள ஒரு பரிசோதனைக் கூடத்தில் ஆய்வுக்கு அனுப்பப்பட்டன. அந்த ஆய்வு முடிவு களின் அடிப்படையில் இவை அனைத் தும் மனித உடலில் இருந்து உருவான கற்கள் அல்ல என்கிற தெளிவான முடிவுக்கு வந்துள்ளனர் திருச்சி ஏ.ஜி. கண் மருத்துவமனையின் மருத்துவக் குழுவினர்.



* எஸ்தரின் கண்கள் பரிசோதிக்கப்படுகின்றன

"எஸ்தர் டெய்சி ராணியின் அனைத்து உடல் உறுப்புகளையும் சி.டி. ஸ்கேன் எடுத்துப் பார்த்துவிட்டோம். அவளது உடலில் எந்தவொரு பாகத்தி லிருந்தும் கற்கள் உற்பத்தியாவதற்கான காரணக் கூறுகள் எதுவுமே இல்லை. அதனால் எங்கள் பரிசோதனை மற்றும் ஆய்வுகளில் கிடைத்த முடிவுகள் அனைத்தையும், உலக அளவில் புகழ் பெற்ற லண்டன் மோர் ஃபீல்டு மருத்துவமனைக்கு அனுப்பி வைத்திருக் கிறோம். அங்கிருந்து வரும் ஆலோ சனைகளின் அடிப்படையில்தான் எஸ்தருக்கு மேற்கொண்டு எந்தவிதமான சிகிச்சைகள் அளிக்கப்பட வேண்டும் என்பதைத் தீர்மானிக்க இயலும்!" எனக் கூறுகிறார் ஏ.ஜி. கண் மருத்துவமனையின் தலைமை மருத்துவ அதிகாரி டாக்டர் ஜி.குமாரராஜ்.

"எஸ்தருக்கு வெளிநாட்டு சிகிச்சை தேவை என்றாலும், அதற்கான பொறுப்பையும் முழுச் செலவுகளையும் எங்கள் மருத்துவமனையின் 'கோவிந்த் அறக்கட்டளை'யே அவற்றை ஏற்றுக் கொள்ளும்!" எனச் சொல்கிறார் திருச்சி, ஏ.கோவிந்தராஜன் கண் மருத்துவனை யின் நிர்வாகி ஜி.ஜி. அனந்தராஜா.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# கீதை காட்டும் பாதை!

சுனந்தாஜி



**பகவான் ஸ்ரீ கிருஷ்ணராலேயே அப்படிப்பட்ட ஒரு உலகை உருவாக்க முடியாதபோது, சாதாரண மனிதர்களான நம்மால் அதைச் செய்ய முடியுமா?**

மருத்துவத்துறையில் கடைப்பிடிக்கப்படும் ஒரு மரபைப் பற்றி சொல்லிக்கொண்டு இருந்தேன். அனுபவம் வாய்ந்த ஒரு மருத்துவ நிபுணர் ஆனாலும்கூட, அவர் தமது மனைவி, மகன் போன்ற நெருக்கமான உறவினர்களுக்குத் தான் ஆபரேஷன் செய்யாமல், வேறு ஒரு சர்ஜனைக் கொண்டே செய்து முடிப்பார். இது ஏன்?

பாச உணர்வின் காரணமாக மனத்தில் கலக்கம் ஏற்பட்டால், உடனே தன்னம்பிக்கை தள்ளாட ஆரம்பித்துவிடும். மன உளைச்சலுடன், ஆபரேஷன் செய்வதைவிட, வேறு ஒரு சர்ஜனிடம் ஒப்படைத்து விட்டு, நிம்மதியாக இருப்பதுதானே புத்திசாலித்தனம்?

எதற்காக இந்த உதாரணத்தை குறிப்பிடுகிறேன் என்றால், சலனப் படும் மனத்தால் சரியானபடி யோசிக்க முடியாது.

குருக்ஷேத்திரத்தில் நின்றபோது அர்ச்சுனனின் மனநிலையும் இப்படித் தான் இருந்தது. அவனது மனம், பந்த, பாச உணர்வுகளால் சலனப்பட்டது. குழம்பி நின்றான்.

பாச உணர்வினால்தான் மனச்சலனம் வர வேண்டும் என்று இல்லை. விருப்பு, வெறுப்பு, கோபம், பொறாமை, அதீதமான பாசம், சோகம் என்று எதுவானாலும் சரி. நம் மனதுக்குள் நுழைந்துவிட்டால், மனம் சஞ்சலமடைந்துவிடும். தெளிவாகச் சிந்திக்க முடியாது. மனம் ஒருமுகப்படாது. கவனம் சிதறிப் போகும்.

எனவே, இந்த உலகில், இந்தத் தருணத்தில் இந்த வேலையைச் செய்ய நீங்கள் பணிக்கப்பட்டிருக்கிறீர்கள் என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். அதனை எப்படிச் செய்ய வேண்டுமோ, அப்படி முழுமையான அர்ப்பணிப்புடன் செய்து முடியுங்கள். அதனைச் செய்து முடித்தவுடன், அடுத்த பணியைப் பார்த்துக்கொண்டு செல்லுங்கள்! இதைத்தான் கிருஷ்ணர், அன்று அர்ச்சுனனுக்குச் சொன்னார். இன்றைக்கும், அது பொருந்தும்.

எல்லாமே இயற்கையின் விதிப்படி தான் நடக்கும். இயற்கையின் சட்டங்களை, உங்கள் கையில் எடுத்துக்கொண்டு, உலகைத் திருத்தப் புறப்படுவது முட்

டான்தனம்.

அப்படியென்றால்?

நீங்கள், உங்கள் பங்கு என்ன என்று புரிந்துகொண்டு, அதைச் சரியாகச் செய்து முடித்து விடுங்கள். அது போதும்.

டிஸ்கவரி சேனலில், காட்டிலே, புலி, மான் கூட்டத்தைத் துரத்திக் கொண்டு போய், ஒரு மானை வீழ்த்தி, அதைத் தின்கிற காட்சியைப் படமாய் எடுத்து ஒளிபரப்புவதைப் பார்த்திருப்பீர்கள்.

ஒரு மான் கூட்டம் மேய்ந்து கொண்டிருக்கும். திடீரென்று ஒரு புலி அங்கே தோன்றும். ஒரே ஒரு மானின் கண்ணில் புலிபட்ட மறுகணம், அந்த செய்தி துரித கதியில் அனைத்து மான்களுக்கும் தெரிவிக்கப்படும். மான்கள், புலியிடமிருந்து தப்பி வேகமாக ஓட ஆரம்பிக்கும்.

துரத்தும் புலி, சிதறி ஓடும் மான்களில் ஒன்றை மட்டும் குறி வைக்கும்.

புலி, அந்த ஒற்றை மானைத் துரத்துவதை, ஸ்லோமோஷனில் காட்டுவார்கள். மானை நெருங்கும் புலி, தாவிச் சென்று, மானைத் தாக்கி, வீழ்த்தும்.

இப்படியாக காட்டில் நிகழும் சம்பவத்தை, நம்மால் டெலிவிஷனில் எப்படிப் பார்க்க முடிகிறது?

யாரோ ஒரு வனவிலங்கு படம் எடுப்பவர் பொறுமையுடன் காத்திருந்து, படமெடுத்து, டிஸ்கவரி சேனலுக்குக் கொடுக்க, அது ஒளிபரப்பாகிறது.

அதற்காக, “சே! கண் எதிரே, ஒரு புலி, மானை அடித்துக் கொல்கிறது. இவர் பாட்டுக்கு சும்மா வேடிக்கை பார்த்தபடி, அதைப் படம் பிடித்துக் கொண்டிருக்கிறார்” என்று அவர் மீது யாரும் குற்றம் சொல்லில்லை!

காரணம் என்ன?

காட்டில் வனவிலங்குகள், ஒன்றையொன்று அடித்துச் சாப்பிடுவது என்பது இயற்கை சுழற்சி விதி. அதன் இடையில் புகுவது மனிதர்களின் வேலை இல்லை.

வனவிலங்கு படம் எடுக்கும் நண்பர், தன் வேலை, படம் எடுப்பதுதான் என்பதை நன்றாக உணர்ந்திருக்கிறார். எனவே, தன் பணியை மிகுந்த பாதுகாப்பு உணர்வுடனும், முழுமையான அர்ப்பணிப்புடனும் செய்து முடிக்கிறார்.

புலியிடம் பலியாகும் மானுக்காக துக்கப்பட்டு இருந்தால், போன காரியம் நிறைவேறுமா?

அவரது நேர்த்தியான படப்பிடிப்பைப் பார்க்கிறவர்கள், “ஐயோ, பாவம் அந்த மான்! அதை யாராவது, எப்படியாவது காப்பாற்ற மாட்டார்களா?” என்று துடிக்கலாம். ஆனால், படம் பிடிக்கும் நபர் மானைக் காப்பாற்றும் முயற்சியில் இறங்கலாமா?

அப்படியே அவர், அந்த மானைக் காப்பாற்றி விட்டார் என்றே வைத்துக் கொண்டாலும், அது எப்படிச் சரியாகும்? புலிக்குக் கிடைக்க வேண்டிய உணவைத் தடுத்து, அதை பசியில் வாட விடுவது தவறில்லையா?

அந்த இடத்தில் மானைக் கோட்டை விட்டு விட்ட புலி, வேறு ஒரு இடத்தில், இன்னொரு மானையோ அல்லது வேறு ஏதாவது ஒரு விலங்கையோ அடித்துச்

“வீட்டைப் பூட்டிக்கிட்டுப் போயும் விருந்தாளி எப்படி உள்ளே வந்து உட்கார்ந்திருக்கார்?”

“போனமுறை வந்தபோதே மாற்றுச்சாவி செய்து வச்சுக்கிட்டாராம்!”

- எஸ். ஸ்ரீவித்யா



சாப்பிடாது என்று உறுதி கூற முடியுமா?

மனித வாழ்க்கையும், காட்டு மிருகங்களின் வாழ்க்கையைப் போலவே இயற்கையின் விதிகளுக்கு உட்பட்டது. அதை மாற்ற முயற்சிக்கிறேன் என்று மனிதர்கள் இறங்குவது முட்டாள்தனம்.

மனிதர்கள் அனுபவிக்கும் சுகங்களும் கஷ்டங்களும் அவரவர் கர்மவினை என்பதை முதலில் புரிந்துகொள்ள வேண்டும்.




இந்த இடத்தில் நான் கொஞ்சம் எச்சரிக்கையாக இருக்க விரும்புகிறேன். காரணம், இந்தச் சமூகத்தில், ஒரு பழக்கம் இருக்கிறது. மனிதர்கள் தங்களுக்கு எது சௌகரியமோ, எது பிடிக்குமோ அதைச் செய்துவிட்டு, அதற்கு ஏற்ப விளக்கம் கொடுத்து விடுகிறார்கள். அதில் அரைகுறையாகவோ, தப்பான கோணத்திலோ, புராண இதிகாச, உபநிஷத்துக்களிலிருந்து மேற்கோள் காட்டுகிறார்கள். இந்த அணுகுமுறை ஆட்சேபனைக்குரியது.

நீங்கள், எந்த ஒரு விஷயத்திலும் உங்களுக்கு உரிய பங்கு என்ன என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். அதனைச் சரியானபடி செய்து முடியுங்கள்.

கண் எதிரே ஒருவர் ஏழ்மையில் கஷ்டப்படுகிறார் என்று வைத்துக் கொள்ளலாம். அவர் உதவி என்று கேட்டால், "ஏழ்மையில் நீங்கள் கஷ்டப்படுவது கர்மபலன். அதை அனுபவித்தே தீர வேண்டும். எனவே கஷ்டப்படுங்கள்" என்று சொல்லி விடாதீர்கள்.

உங்களால், அவரது கஷ்டத்தைப் போக்கும் விதமாய் என்ன உதவி செய்ய முடியுமோ, அதைச் செய்யுங்கள். உதவி செய்தவுடன், உங்கள் 'பணி முடிந்ததாக எண்ணுங்கள்.

இந்த நாட்டிலிருந்தே வறுமையை ஒழிக்க வேண்டும் என்பதுகூட உங்களது விருப்பமாக இருக்கலாம். ஆனால், அதை நீங்கள் ஒருவரே முழுமையாகச் செய்து முடித்துவிடலாம் என நினைக்காதீர்கள். வறுமையை ஒழிக்கும் பணியில் உங்களால் எந்த அளவுக்குச் சேவை செய்ய முடியுமோ, அதை முழுமையான அர்ப்பணிப்புடன் செய்யுங்கள்.

உலகம் என்றால் நல்லது, கெட்டது இரண்டும் இருக்கும். சந்தோஷம், துக்கம் இரண்டும் இருக்கும். செல்வம், வறுமை இரண்டும் இருக்கும்.

ஒன்றை மட்டுமே உலகம் முழுவதும் பரவிடச் செய்ய முடியும்; மற்றதை உலகிலிருந்தே முற்றிலுமாக அகற்றிவிட முடியும் என்று நினைக்காதீர்கள். அது சாத்தியமே இல்லை.

பகவான் ஸ்ரீ கிருஷ்ணராலேயே அப்படிப்பட்ட ஒரு உலகை உருவாக்க முடியாதபோது, சாதாரண மனிதர்களான நம்மால் அதைச் செய்ய முடியுமா?

மீண்டும் ரத்தினச் சுருக்கமாக பகவான் கிருஷ்ணர் சொன்னதை உங்களுக்குச் சொல்கிறேன்:

கீதையின் சாராம்சமே இதுதான்!

உங்களுக்குரிய கடமை என்ன என்பதைப் புரிந்துகொள்ளுங்கள். உங்கள் பணியைச் செய்து முடிப்பதில் உங்களை முழுமையாக அர்ப்பணித்துக் கொள்ளுங்கள்.

வெற்றி உங்கள் கையில்!

ஓம் சாந்தி!

(நிறைந்தது)

தொகுப்பு: **எஸ். சந்திரமௌலி**

படம்: **ஸ்ரீஹரி**



# போட்டுத் தாக்கு!

நடிகர் சூர்யாவிடம் கேட்கக் கூடாத பத்துக் கேள்விகள் :

1. சந்திரமுகி க்ளைமாக்ஸைப் பார்த்ததுக்குப் பிறகும் கூட உங்க முடிவுல உறுதியாவே இருக்கீங்களா?

2. உங்க ஏரியாவுல மழைகூட 'ஜோ'ன்னுதான் பெய்யுமாமே...

3. கஸ்தூரிராஜா மாதிரி பரபர பேட்டி கொடுக்கற அப்பா இல்லையேன்னு வருத்தப்பட்டீங்களாமே.. நெஜம்தானா..?

4. தங்கை கல்யாணத்துக்கு வாறப்போ மேட்டரை ஓபன் பண்ணச் சொல்லி சி.எம்.கிட்ட கேட்டுக்கிட்டீங்களாமே...

5. பருத்திவீரனை நினைச்சு ராத்திரி தூக்கமே வராம மொட்டை மாடில சுத்தறீங்களாமே?

6. டோலிவுட்ல மார்க்கெட் எகிறிட்டதால இனிமே சிங்குச்சான் டிரஸ்தானே போடுவீங்க?

7. ஆறு படத்தை நிறைய பேரு டாரு.. டாருன்னு கிழிச்சுட்டாங்களாமே?

8. சூஜினிதான் அடுத்த ரஜினின்னு எல்லாம் பன்ச் டயலாக் எப்போ விடப்போறீங்க..?

9. கிசுகிசுக்களை ஜீரணிக்கறதுக்காக ஃபாரின்ல இருந்து ஸ்பெஷல் டைஜீன் மாத்திரைகளை இம்போர்ட் பண்ணியிருக்கீங்களாமே?

10. அப்பா பிள்ளையா இருந்த நீங்க எப்போ 'அம்மா' பிள்ளையா மாறினீங்க?

- பரமு

சொந்தங்கள் வாழ்க! 12

# கண்ணாடிப் பந்து, ஜாக்கிரதை!



**மா**யாஜாலம் நிறைந்த இந்த உலகம், பலவிதத்திலும் சம்பாதிப்பவர்களை ஈர்க்கிறது. வெற்றிலை, பாக்கு வைத்து அழைக்காத குறையாக 'க்ரெடிட் கார்ட்' கொடுக்கும் வங்கிகளின் துரத்தல்கள், மேலும் உயர வேண்டும் எனும் மனிதர்களின் தேடல்கள், பிறருடன் போட்டி போடும் ஓட்டங்கள், பகட்டான வாழ்வின் மீது ஏற்படும் மோகங்கள், கவர்ச்சி - காதல் போன்ற ஈடுபாடுகள் - இவற்றைக் கூட்டிக் கழித்தால் உறவுகளில் மிஞ்சுவதென்ன?

யாரைப் பார்த்தாலும் வேலை பளுவைப் பற்றிய புகார்கள்; ஒரு மனைவி என்னிடம் சொன்னார், "நான் என் வீட்டுக்காரருடைய 'செல்ஃபோனா'க இருக்கக்கூடாதா?" என்று! ('வாக்' போகும்போது, ஒரு கச்சேரி கேட்கும்போதுகூட ஏன்?) தொழில், குடும்பம் இரண்டையும் சமமாகப் பாவிக்கத் தவறியதால், அவர் ஒன்றில் மட்டுமே கவனம் செலுத்தினார். இன்று எல்லோருமே இந்நிலையில்தான் இருக்கிறோம்! கழைக்கூத்தாடி கம்பியில் நடக்கும்போது, ஒரு பக்கம் சாயாமல் மேற்கொள்ளும் சமநிலை தான் (balance) இன்றைய தேவை. அலுவலகப் பிரச்னைகள் எப்படி ஊடுருவி வாழ்வில் பிரச்னைகளைப் பெரிதுபடுத்துகின்றன என்பதற்கு சில உதாரணங்கள் கீழே:

- பிரபலமான நிறுவனமொன்றில் சீனியராக வேலை பார்த்து வந்த, குமரேசனது குழு, நிறுவனம் எதிர்பார்த்த அளவு 'ரிஸல்ட்' காட்ட முடியாமல் போக, மிகவும் கடமை உணர்வு கொண்ட அவர் தோல்விக்குத் தன் குழுவினரைக் காரணம் காட்டி, அவர்களிடம் சதா, கடுமையாகப் பேச, அவரைப் பற்றி புகார் மேலிடம் போய் விட்டது! விளைவு? இரவு தூக்கமின்றித் தவித்து மனப் பிரச்னைக்குள்ளானார் குமரேசன். (குமரேசன் சார், குழு உங்கள் குடும்பம் இல்லீங்களா? உங்களிலிருந்து அவங்களைப் பிரிக்கலாமா? நீங்க எங்கே தப்பு பண்ணினீங்கன்னு யோசியுங்க; அப்போதான் உங்க குறைகளைச் சரி



மனநல ஆலோசகர் பிருந்தா ஜெயராமன்

பண்ணிக்க முடியும்! ஒரு திறமையான தலைவர் எதிர்காலத்திலே தோல்வி வராம இருக்க, 'நாம' என்ன செய்யறதுன்னுதானே நினைப்பாரு? உங்கள் தூக்கத்தைப் பலியாகக் கொடுக்கறது எப்படி உதவும்?)

● வனிதா மகா புத்திசாலி. அவளுக்கு அமைந்த 'பாஸ்' (boss) ஒருபடி கீழே என்பது நிரூபணம் ஆன ஒன்று! இதை ஏற்றுக் கொள்ள முடியாத 'பாஸ்' அவளை வறுத்தெடுத்தார். வனிதாவின் பொருளாதாரச் சூழ்நிலை, வேலையைத் தூக்கி எறிய இடம் கொடுக்கவில்லை. தன்னை வேலைக்கு அனுப்பி வைக்கும் கணவன் மீது எரிந்து விழுந்தாள். (ஹலோ! தாழ்வு மனப்பான்மை இருக்கிற அதிகாரியைச் சமாளிக்கிற திறமை உங்களுக்கு இல்லைன்னா புருஷனை வறுத்தெடுப்பது சரியா? உங்க வேலைகளை கரெக்டா செஞ்சுட்டு, நழுவற சமத்து இல்லைன்னா, அவஸ்தைப் பட வேண்டியதுதான்!)

● விந்தியாவின் 'பாஸ்' ஒரு மாதிரி... சந்தர்ப்பம் கிடைக்கும்போது, கீழே விழுந்த பேனாவை எடுக்கும்போது தவறுதலாக அவள்மேல் கைபட்ட மாதிரி ஒரு பாவனை காட்ட அவரால்தான் முடியும்! ஆத்திரப்பட்டு, பெருமூச்சு விடுவதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியவில்லை அவளால்! (இதோ பாருங்க, விந்தியா... உங்களைவிட அதிகமான 'ஹாரஸ்மெண்ட்'க்கு வேலைக்குப் போகும் பல பெண்கள் ஆளாகிட்டு இருக்காங்க... ஆண்களுக்குச் சமுதாயம் ரொம்ப இடம் ('லைசன்ஸ்') கொடுத்திருச்சு! ஆனால் தற்காப்புங்கிறது பொண்ணுக்குத் தெரிஞ்ச உத்தி. ஆத்திரம் பிரச்னையைத் தீர்க்காது; நீங்க துணிச்சலா செயல்பட வேண்டிய நேரமிது. சண்டை போடச் சொல்லலே; புகார் கொடுக்கச் சொல்லலே! ஒரு பார்வை, ஒரு அங்க அசைவு போதும் அந்த நபருக்குப் பயங்காட்ட... உங்க சக்தி உங்களுக்குத் தெரியலேன்னா என்ன செய்ய?)

● திலீப் யாரிடமும் அதிகம் பேச மாட்டார்; தானுண்டு, தன் வேலை உண்டு என்று இருந்தவருக்கு புதிய 'க்ரூப் லீடர்' வந்ததும் சங்கடம் அதிகமாகிவிட்டது. திலீப்பின் திறமையைப் பார்த்து குழுவின் தலைவர் அதிகமான பொறுப்புகளைச் சுமத்த, தன் கீழ் வேலை பார்ப்பவர்களது ஒத்துழையாமை அவரைச் சங்கடப்படுத்தியது; ஆனால் தன் தலைவரிடம் மற்றவர்களைக் காட்டிக் கொடுக்காது, அவர்கள் வேலையையும் தானே செய்ய ஆரம்பித்த திலீப் உற்சாகம் இழந்தார்.

(என்ன திலீப், பேச வேண்டிய நேரத்தில் பேசாமலிருந்தால் எப்படி? மக்கள் உங்களது இந்த நல்ல குணத்தைப் பயன்படுத்திக் கொண்டு மிதித்து விடுவார்கள். உங்கள் குழுவின் தலைவரிடம் நல்லநேரம் பார்த்து உங்கள் சங்கடத்தைக் கூறுங்கள். கூறும் போது பிறரைக் குற்றம் சொல்வதைத் தவிர்த்து, உங்கள் கஷ்டங்களை மட்டும் எடுத்துச் சொல்லிப் புரிய வையுங்கள். தீர்வு கிடைக்கும், நீங்கள் திறமையாகப் பேசினால்!)

● அருணும் மானாஸாவும் ஓர் அரசாங்க அலுவலகத்தின் ஒரே பிரிவில்



"பாகவதரோட 'கானா பாட்டு'க்குதான் இந்தக் கைத்தட்டல்!"

- இடைப்பாடி ஜெ. மாணிக்கவாசகம்

இணைந்து தொழில் புரிபவர்கள். இருவரிடையே காதல் கனிந்து, மணம் செய்து கொள்ளத் தீர்மானித்தார்கள். பெற்றோர் ஏற்றுக்கொள்ளாததால் காதல் தோல்வியடைந்தது. மானஸா வாழ்க்கையையே வெறுத்துத் தற்கொலை முயற்சியில் இறங்கினாள். தோல்விகள், துரோகங்கள், ஏமாற்றங்கள், வெற்றிகள் என்று பல காதல் ரகங்கள், கதைகள் அலுவலகங்களில், தவிர விவாகரத்துகள், 'இரண்டாவது', குடி, போதை விஷயங்கள் போன்ற குடியைக் கெடுக்கும் பல செய்திகள் அலுவலக அக்கப் போரில் அலசப்படலாம்.

**பெரும்பாலான பிரச்னைகளின் விதைகள், வேலை - வீடு என்று ஒன்றுக்காக ஒன்றைக் காவு கொடுக்கும்போது தான் நடப்படுகின்றன.**

கோக்ககோலா நிறுவனத்தின் மூத்த அதிகாரி, திரு. பிரயன் டைஸன் சொன்னார்: "வாழ்க்கை என்பது ஐந்து பந்துகளைக் கையில் வைத்துக்கொண்டு விளையாடும் அம்மானைதான்! - தொழில், குடும்பம், ஆரோக்கியம், உறவுகள், உற்சாகம் ஆகிய பந்துகளில், தொழில் எனும் பந்து மட்டும் ரப்பரால் ஆனது! கீழே விழுந்தால், கூடிய விசையுடன் மேலே எழும்ப வல்லது! மற்றவையெல்லாம் கண்ணாடிப் பந்துகள்; கீழே போட்டால் போட்டதுதான். சுக்கு நூறாக உடைந்தபின் வருந்துவதில் பயனில்லை!" என்று எச்சரிக்கிறார் அவர்.

உண்மையல்லவா? வீட்டில் உள்ள உறவுகளில் எடுத்துக் கொள்ளும் உரிமைகளை அலுவலகத்தில் எடுத்துக்கொள்ள முடியாத காரணத்தால், தொழிலில் ஏற்படும் தோல்விகள், கோபங்கள், வருத்தங்கள், பொறாமைகள் போன்ற கசப்பான உணர்வுகளுக்கெல்லாம் வடிகால் குடும்பம் தானே? ஆனால் இந்த நடத்தைக்கு நாம் கொடுக்கும் விலை மிகப் பெரிது! சுமை அதிகமாகி, மன அழுத்தம் ஏற்பட்டு, இளம் வயதிலேயே பல விதமான உடல்/மன நோய்களுக்கு ஆளாகும் நபர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருவது அதிர்ச்சியைத் தருகிறது.



"தலைவர் இப்பெல்லாம் உணவுல எண்ணெயே சேர்த்துக்கறதில்லையாமே?"

"ஆமாம்; சாப்பிடும் போதுகூட 'எண்ணெய்க்கு உணவு' பிரச்னை ஞாபகத்துக்கு வந்து பேஜாராக்குதாம்!"

- யமுனா ரெங்கநாதன்

'யானையைப் பிடித்து பானையில் அடைக்கும்' ஜாலம் இங்கு தேவை. பிறருடன் பழகும்போது, "எனது உரிமைகள் ஆரம்பிக்கும் எல்லையோடு உனது சுதந்திரம் நின்றுவிடும்" என்பதை யார் தெளிவாகப் புரிந்துகொண்டு, உறவுகளை ஆரோக்கியமாக வைத்திருக்கிறாரோ, அவருக்குத் தொழில் புரியும் இடத்தில் மரியாதை கூடும். மன அழுத்தம் குறையும்!

எப்படிப்பட்டவரையும் சமாளிப்பது, தட்டிக் கொடுத்து வேலை வாங்குவது, நினைத்ததை/உணர்ந்ததைத் தெளிவாகச் சொல்வது, பிரச்னைகளைத் தெளிவோடு கையாள்வது, சரியான நேரத்தில் சரியான தீர்மானம் எடுப்பது போன்ற பல திறமைகள் இருப்பவர் எல்லோராலும் விரும்பப்படுவார்.

சொந்தங்கள் தழைக்க, பேச்சுத் தொடர்பு எவ்வளவு முக்கியம் என்று அடுத்தவாரம் பார்க்கலாமா?

(பேசலாம்)

நான் ராஜாமணியைப் பார்க்கப் போனபோது, ஒரு பெரிய மஞ்சள் நிறப் பையை எடுத்துக்கொண்டு வெளியே கிளம்பிக் கொண்டிருந்தான்.

'எங்கே?' என்கிற மாதிரி சைகையால் கேட்டேன்.

"இன்னிக்கு வெள்ளிக்கிழமை இல்லியா? கமலாவுக்கு என்னவோ கொழுக்கட்டை சாப்பிடணும்போல் இருக்காம். பிச்சுப் பிள்ளை தெருவுக்குப் போய் வாங்கிக் கொண்டு வரணும்!"

"அந்தக் கையேந்தி பவன்லயா?"

"உனக்குத் தெரியாது. படு டேஸ்ட்டா இருக்காம். கமலா சொல்கிறாள்!" என்றவன், "ஐம்பது ரூபாய் எடுத்துக் கொண்டிருக்கிறேன். போதுமில்லையா?" என்றான். ஐம்பது ரூபாய்க்குக் கொழுக்கட்டையா?

"சரியாப் போச்சு. இன்னிக்கு சஞ்சய் கச்சேரி இருக்கு. கொழுக்கட்டை வாங்கப் போனால் அவ்வளவுதான்!"

"கொழுக்கட்டை மரெகத கோதண்ட பாணி பாடுவார்.."

"பாவி, கொலுவ மரெகதடா! எப்பப் பார் அதே ஞாபகம்! நான் வரலே. நீ போ. நாளைக்குப் பார்க்கலாம்!" என்றேன்.

அடுத்த நாள் ராஜாமணி வீட்டுக்குப் போனபோது, "உள்ளே வந்து உட்காருங்க. உங்க ஃப்ரெண்டு பக்கத்திலேதான் குஜராத்தி மாமி வீட்டுக்குப் போயிருக்கார். என்னமோ மேதி சப்பாத்தியும் சமோசாவும் பண்ணியிருக்கார்களாம்."

இன்னொரு நாள், அவசர அவசரமாக வீட்டுக்குள் ராஜாமணி நுழைந்து கொண்டிருந்தபோது, "உட்கார். கமலாவுக்கு வாழைக்காய் பஜ்ஜி பிடிக்கும் என்று வாங்கி வரப் போனேன். கொஞ்சம் லேட் ஆயிடுச்சு..." என்று டைனிங் டேபிளில் பொட்டலத்தைப் பிரித்துப் பரப்பி வைத்தான். பஜ்ஜி கொடுவாள் சைஸில் பயங்கரமாக இருந்தது.




சாருகேசி

அன்றைக்குத்தான் அவனால் கச்சேரிக்கு வரமுடியவில்லை என்று மறுநாள் போனால், கிச்சடியை ஒரு பிளேட்டில் வைத்துவிட்டு யாருக்கோ காத்துக் கொண்டு இருப்பதுபோல் உட்கார்ந்திருந்தான் ராஜாமணி. கிச்சடி மஞ்ச மசேர் என்று கண்களைப் பறித்தது.

"ஏண்டா, இத்தனை ஓவியர்கள் லலித் கலா அகாடமியில் கலர் கலரா பெயிண்டிங் எல்லாம் வைக்கிறார்களே, ஒருவருக்குக் கூட இந்த பஜ்ஜி, கிச்சடி, கேசரி எல்லாம் அழகா வரைஞ்சு வச்சு சீஸன்ல கண்காட்சி மாதிரி நடத்த தோணாதோ?" என்றான்.

"உன்னை மாதிரி ஆட்கள் அதையும் வாங்கிக்கொண்டு போய் பீஸ் பீஸாகக் கட் பண்ணி, பீட்ஸா மாதிரி சாப்பிட்டு விடக் கூடாதே என்பதற்காகத்தான் அதை எல்லாம் பெயிண்டிங் மாதிரி வரைகிறதில்லை. தெரிந்ததா?" என்றேன். ராஜாமணிக்கு இது பிடிக்கவில்லை.

"நானா சாப்பிடுகிறேன்? எல்லாம் கமலாவுக்கு..." என்றான்.

"இன்றைக்கு காயத்ரி வெங்கட்ராகவன் கச்சேரி இருக்கிறதே! ராஜாமணிக்குப் பிடிக்குமே?"

"அதைவிட மைக்ரோ சாஃப்ட் ரொட்டிதானே முக்கியம்? யாரோ பஞ்சாபிக்காரர் விற்கிறாராம். எண்ணெய் எல்லாம் யாருக்கு ஆகிறது? கொலஸ்ட்ரால் வந்துவிடாதோ?" என்றாள் கமலா.

கமலாவுக்குத் தேங்காய் எண்ணெய்ச் சமையல் என்றாலே பயம் என்று ராஜாமணி சொல்லியிருக்கிறான். 'கேரளாவில் எல்லாத்துக்கும் தேங்காய் எண்ணெய் தான். இந்தியாவில் அதிகக் கிழங்கள், ஆரோக்கியக் கிழங்கள் கேரளாவில்தான் அதிகம் என்றால் கமலா காதில் போட்டுக் கொள்ள மாட்டாள். அவளுக்கு எல்லாம் வாயில் போட்டுக் கொள்ளத்தான் பிடிக்கும்!' என்பான் ராஜாமணி கிண்டலாக.

அடுத்து கமலா என்ன கேட்டாள், ராஜாமணி என்ன வாங்கிக்கொண்டு வந்தான் என்று அறிவதில் எனக்கே கொஞ்சம் ஆர்வம் அதிகம் ஆயிற்று. ராஜாமணி வீட்டுக்குப் போனவன், "லட்சுமி ரங்கராஜன் கிரவாணியில் 'வாணனை மதி சூடிய மைந்தனை' பாடினாளாம்!' என்றேன்.

ராஜாமணி காதில் வாணனும் விழவில்லை, மைந்தனும் விழவில்லை. கிரவாணியின் முதல் பகுதி மட்டும்தான் விழுந்தது.

"கற்பகாம்பாள் மெஸ்ஸில் கீரைவடை இப்போதும் போடுகிறானோ?" என்றான் திடீரென்று.

நான்பாட்டுக்கு வாயை மூடிக்



கொண்டு இருந்திருக்கலாம். கிரவாணியைப் பாடியதைச் சொல்லாமல், தோடி பாடியதைச் சொல்லியிருக்கலாம். என் நாக்கில் சனி மட்டுமா? ஞாயிறு, திங்கள், செவ்வாய் எல்லாமே இருந்தன. கிரவாணி, கீரைவடையை நினைவுபடுத்தி விட்டது ராஜாமணிக்கு.

"பத்தே நிமிஷம். சுடச்சுடக் கீரை வடை வாங்கிக்கொண்டு வந்துவிடுகிறேன். கமலாவுக்கு ரொம்பவும் பிடிக்கும்!" என்று மஞ்சள் பையைத் தூக்கிக் கொண்டு கிளம்பிவிட்டான்.

அவனை நிறுத்தினேன். "இதோ பார், கீரைவடை நாளைக்கு வாங்கிக் கொள்ளலாம். இன்றைக்கு ராகசுதாவில் பட்டாபிராம் பண்டிட் பாடுகிறான். பையை வைத்துவிட்டு வா!" என்றேன்.

"ஐயோ, கமலா கோபித்துக் கொள்வாள். அவளிடம் யார் வசவு வாங்குவது? நீ பாட்டுக்கு எல்லார் பாட்டையும் கேட்டுவிட்டு மண்டையை மண்டையை ஆட்டிக் கொண்டிருப்பாய். கீரை வடை வாங்கிக்கொண்டு வரவில்லை என்றால் என் மண்டையை அல்லவா கமலா போட்டு உருட்டுவாள்?"

இதைக் கமலா கேட்டாளோ இல்லையோ, ராஜாமணி பையும் கையுமாகக் கிளம்பியாயிற்று.

"முடிந்தால் தனி ஆவர்த்தனத்துக்குப் பிறகு வந்துசேர். கடைசியில் துக்கடா எல்லாம் கேட்கலாம் பார்!" என்று தெரியாமல் சொல்லி வைத்தேன்.

"பக்கோடாவா? கமலாவுக்கு உசிராச்சே? பிச்சுப் பிள்ளை தெருவில்..."

"ஐயோ, பக்கோடா அல்ல, துக்கடா. இனிமேல் பிச்சுப் பிள்ளை தெரு, பிச்சுப் பிள்ளை தெரு என்றால் பிச்சுப்புடுவேன் பிச்சு!" என்றேன்.

அடுத்த வாரம் ரஞ்சனி-காயத்ரி கச்சேரி இருக்கிறதே என்று அவசர அவசரமாக ராஜாமணி வீட்டுக்குப் போனேன்.

ராஜாமணி வயிற்றில் ஒரு கையும், தலையில் ஒரு கையுமாக ஏதோ கிரேக்க தத்துவஞானி மாதிரி தலையையும் கன்னாபின்னாவென்று கலைத்துவிட்டுக் கொண்டு, உட்கார்ந்திருந்தான். பக்கத்தில் கமலா.

"என்ன ஆச்சு?" என்றேன் கமலாவிடம்.

"அவரையே கேளுங்கள். வயிறை என்னவோ செய்கிறதாம்!"

"உங்களுக்கு ஒண்ணுமே இல்லையா?" என்றேன் சந்தேகத்துடன்.

"ஊஹூம், இவருக்குத்தான். ஊரில் உள்ள அத்தனை பட்சணக் கடையிலும் ஹோட்டலிலும் போய் வாங்கிச் சாப்பிட்டால்?"

"உங்களுக்கு என்று அல்லவா சொன்னான் ராஜாமணி?"

"யார் சாப்பிட்டது பாதிக்கு மேலே? இவர்தானே!"

ராஜாமணி பரிதாபமாக முகத்தைத் திருப்பிப் பார்த்தான். "வயிறு சம்பந்தமா பார்க்கிற டாக்டர் யார்? காஸ்ட்ரோ என்டராலஜிஸ்டா, என்டரோகாஸ்ட்ராலஜிஸ்டா?"

"எந்தரோ மகானுபாவுலு! பாவி, இப்படிக் கண்டதையும் சாப்பிட்டு வயிறைக் கெடுத்துக் கொள்ளணுமா?... வா, போகலாம்!"

"டிசம்பர் சீசன்லே அகாடமி கான்டீன், நாரதகான சபா கான்டீன் ரெண்டுமே நன்றாக இருந்ததாமே? நான் போகவே இல்லையே என்று வருத்தமாக இருக்கிறதுடா!" என்றான் ராஜாமணி. ●




"மன்னா, பட்டத்து யானையைக் காணவில்லை!"

"அப்பாடா, தீவனச் செலவு மிச்சம்!"

- லீலாஜி

# உபதேசம் யாருக்கு?



அருள்வாக்கு

நல்ல விதையானாலும் ஊஷர பூமியில் (உவர் நிலத்தில்) விதைத்தால் வீணாகப் போவதுபோல் ஸத்வித்யையும் அஸத்துக்கு உபதேசிக்கப்பட்டால் வீணாகும் என்று சாஸ்த்ரம் எச்சரிக்கிறது. இப்படிச் சொல்லியிருக்கிறது; யோக்யதையுள்ள சிஷ்யன் கிடைக்கவேயில்லை என்றாலும்கூட ஒரு வித்வான் தன் வித்யையோடேயே செத்தாலும் சாகட்டும்; ஆனால் என்ன ஆபத்து வந்தாலும் அபாத்ரத்துக்கு மட்டும் அதைக் (கற்றுக்) கொடுத்து விடக்கூடாது. ஒரு கதை மாதிரிக்கூடச் சொல்லியிருக்கிறது; வித்யா தேவதை ஒரு ப்ராம்மணனிடம், "நான் உனக்குக் கிடைத்திருக்கிற பெரிய புதையல். புதையலை எப்படிக் கவனமாகக் காப்பாற்றி, கருத்தாகச் செலவழித்து, தக்காருக்கே விநியோகம் பண்ணுவாயோ அப்படித்தான் என்னையும் நீ பண்ண வேண்டும். சுத்தனாய், ஜிதேந்த்ரியனாய், ச்ரத்தையோடு வித்யாப்யாஸம் செய்கிறவனாய், 'இதை நிதியாக ஸம்ரக்ஷிக்க வேண்டும்' என்று நினைக்கிறவனாய் உள்ளவனுக்குத்தான் என்னை நீ உபதேசிக்க வேண்டும்" என்று சொல்வதாகத் (தர்ம சாஸ்த்ரம்) தெரிவிக்கிறது.

அக்கறையோடும், பக்தியோடும் கேட்காதவனுக்கும், தர்ம விரோதமாக வித்யையை ப்ரயோஜனப்படுத்தக் கூடியவனுக்கும் சொல்லிக் கொடுக்கவேகூடாது என்று மநு தர்ம சாஸ்த்ரத்தில் இருக்கிறது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

ஒரு பக்கம் அண்ணன் செல்வராகவனின் இயக்கத்தில் சீரியஸான 'புதுப்பேட்டை' இன்னொரு பக்கம் பூபதி பாண்டியன் எனும் புதுமுக இயக்குனரின் 'திருவிளையாடலில்' முழுக்க முழுக்க நகைச்சுவை. திருமணத்துக்குப் பிறகு துருதுருவென்று இயங்க ஆரம்பித்திருக்கும் தனுஷ், வயசுக்கு மீறிய பக்குவத்தோடு பதில்





# "ரஜினி சூப்பர் ஸ்டாரே இல்லை!"

சொல்கிறார். பேட்டி முடித்துக் கிளம்பும்போது "பரபரப்பா தலைப்பு வெச்சுடாதீங்க தலைவா!" என்ற வேண்டுகோள் வைக்கிறார்...

ஓர் இளம் ஹீரோ, திருமணம் செய்துகொண்டால் மார்க்கெட் சரியும். இமேஜ் பாதிக்கப்படும் என்பது போன்ற கருத்துகளை எப்படி எடுத்துக்கொள்வீர்கள்?

சொந்தப் பிரச்னைகளை கொஞ்ச நேரம் மறந்து விடலாம் என்றுதான் மக்கள் தியேட்டருக்கு வருகிறார்கள். அவர்களுக்கு எந்த ஹீரோ கல்யாணம் பண்ணிக்கொண்டாலும் எந்தக் கவலையும் இல்லை. எனது திருமணத்தையும் ரசிகர்கள் பொருட்படுத்தவில்லை. மாறாக ரசிகர்கள் தரப்பிலிருந்து எனக்கு வாழ்த்துகள் குவிந்தன. ஒரு பிரபல

ஹீரோ திருமணம் செய்து கொண்டால் அவரது மார்க்கெட் சரியும் என்பது வீண் கற்பனை.

**ரஜினியின் மாப்பிள்ளை என்ற அடையாளம் உங்களுக்கு பலமா? சுமையா?**

ரஜினி சார் என்னுடைய மாமா என்று நானும் நினைத்துப் பார்ப்பதில்லை. தனுஷ் எனது மருமகன் என்று அவரும் நினைப்பதில்லை. இதையெல்லாம் தாண்டி எங்கள் உறவு எங்கேயோ போயாச்சு. ரஜினி சார் சூப்பர் ஸ்டார் என்றெல்லாம் எனக்குத் தோன்றுவதே இல்லை. அத்தனை எளிய மனிதர் அவர். ரஜினியின் மாப்பிள்ளை என்பது பலமா, சுமையா என்றால் சுமை என்றுதான் சொல்வேன். அவர் பெயரைக் காப்பாற்ற வேண்டுமே. அது சாதாரண விஷயமில்லை.

**ரஜினியின் ரசிகர்கள் இனி உங்களுக்கும் ரசிகர்கள்தானே? அவர்கள் உங்களிடம் அதிகம் எதிர்பார்க்கிறார்களா?**

இதுவரைக்கும் இல்லை. ஏனென்றால் அவங்க தலைவரே இன்னும் இந்தியாவின் நம்பர் ஒன் ஸ்டாராக இருக்கிறார். அவங்க எதற்கு இன்னொரு நடிகனிட்டே எதிர்பார்க்கணும்? ரஜினிக்கு மாற்று இல்லை.

**அவரிடமிருந்து எதைக் காப்பியடிக்க விரும்புவீர்கள்?**

காப்பியடித்தல் என்பது நூறு பர்செண்ட் போலித்தனம். அந்தத் தவறை நான் எப்பவுமே செய்யறதில்லே. அவரது தன்னடக்கம், எல்லோரையும் சமமாக நடத்துவது, இரண்டையும் அவரிடமிருந்து கற்றுக்கொள்ள வேண்டும். ஆரம்பம் முதலே நான் அமைதியான ஆள். எப்போதுமே ஆட்டம் போட்டதில்லை. இன்னும் இன்னும் மேலே போகும்போதும் இப்படியேதான் இருப்பேன், ரஜினி சார் மாதிரி.

**ரசிகர்கள் மாற்றத்தை விரும்புகிறார்கள் இல்லையா?**

ஒவ்வொரு தலைமுறையிலும் ஒரு செட் ஆஃப் டைரக்டர்ஸ், நடிகர்கள் ஆண்டு கொண்டிருப்பார்கள். அந்தத் தலைமுறை முடிந்து, அடுத்த தலைமுறை நுழையும்போது அவர்கள் கட்டுப்பாட்டில் சினிமா

–தனுஷ் மனம் திறக்கிறார்!

வந்துவிடும். ரசனையும் அப்படித்தான். ரசிகர்களின் தலைமுறையும் மாறிவிடுகிறது. இந்த மாற்றத்துக்கு நடுவில் வரும் சிறு இடைவெளியில் சினிமா சரிந்துவிடும். புதிய தலைமுறை நுழைந்து, புதிய தலைமுறை ரசிகர்களுக்காகப் படங்கள் வரும்போது சினிமா மேலே வந்துவிடும். இந்த மாற்றம்தான் இப்போது நடந்திருக்கிறது.

***இப்போது இருப்பது உங்களைப் போன்ற புதுமுகங்களுக்கான சினிமா தானே?***

புது எண்ணங்களுக்கான சினிமா என்று சொல்ல வேண்டும். சினிமா இப்போது எக்ஸ்பிரிமெண்ட் ஆகிவிட்டது. டெக்னாலஜி விஸ்வரூபம் எடுத்து நிற்கிறது. கம்ப்யூட்டர் கிராபிக்ஸ், கம்ப்யூட்டர் போஸ்ட் புரொடெக்ஷன் இல்லாமல் படமே வருவதில்லை. ஆடியன்ஸ் கதை வேணாம்யான்னு சொல்றாங்க. முன்பெல்லாம் கதைதான் பிரதானமா இருந்தது. பொழுதுபோக்குதான் முக்கியம், அது இருந்தா படம் பார்க்கிறோம்னு வர்றாங்க, இல்லேன்னா 'அடப் போங்கையா. அழறதுக்கு வீட்ல டிவி இருக்கு. இங்கேயும் ஏன் சாகடிக்கிறீங்க?'ன்னு சபிச்சுட்டுப் போறாங்க!

***உங்க கருத்து மிகவும் முரண்பாடாக இருக்கிறதே! நல்ல படத்தில், கதையை நம்பி படமெடுக்கிற இயக்குனர்களின் டைரக்‌ஷனில் நடிக்க வேண்டும் என்று தானே பாலுமகேந்திரா படத்தில் நடித்தீர்கள். பாலா இயக்கத்திலும் நடிப்பதாக இருந்ததே?***

நான் முரண்படவில்லை. எத்தனை நல்ல கதையாக இருந்தாலும் படுவேகமான திரைக்கதையில் சொல்ல வேண்டிய கட்டாயம் வந்திருக்கிறது. சென்டிமெண்ட்டைக்கூட நின்று நிதானமாகச் சொல்லிக்கொண்டிருந்தால் இப்போது எடுபடாது. சோகமான கதையாக்கூட இருக்கலாம். ஆனால் அதுவும் துருதுருவென்று போக வேண்டும் என்று ரசிகர்கள் எதிர்பார்க்கிறார்கள். இதுதான் புதிய தலைமுறையின் ரசனை என்று சொல்கிறேன்.

'அது ஒரு கனாக் காலம்' எனது சினிமா கேரியரில் ஒரு மைல் கல். பாலு மகேந்திரா ஒரு மேதை. அவர் இயக்கத்தில் நடித்தது என் பாக்கியம். அதெல்லாம் எத்தனை பேருக்குக் கிடைக்கும் என்று சொல்லமுடியாது. அந்தப் படம் ஏன் சரியாகப் போகவில்லை. ஏன் எதிர்பார்த்த விமர்சனங்கள் வரவில்லை என்பதையெல்லாம் என் மனசுக்குள்ளேயே வைத்துக்கொள்ள விரும்புகிறேன். பாலாவுடன் இணைந்து பணிபுரிய இன்னும் கதை கிட்டவில்லை. அதனால் அந்தப் படம் தள்ளிப் போகிறது.

***தங்களுக்கு ஏற்றமாதிரி படம் பண்ணும் ஹீரோக்கள்தான் அதிகமாக இருக்கிறார்கள். ஒன்று ரவுடி அல்லது மனநோயாளி. இல்லையென்றால் கல்யாண குணங்கள் நிரம்பிய ஹீரோ! இவை மூன்றுமே இல்லாமல் சராசரி மனிதர்களாக ஹீரோக்கள் நடிக்கத் தயங்குகிறார்கள். நீங்கள் எப்படி?***

'துள்ளுவதோ இளமை'யில் தொடங்கி 'அது ஒரு கனாக் காலம்' வரை சராசரியான சக மனிதனை நினைவூட்டுகிற கேரக்டர்களில்தான் நடித்து வருகிறேன். இந்த கேரக்டர்களை ரியல் லைஃப் போல அப்படியே காட்டினால் படத்தை எடுத்து திரைப்பட விழாக்களுக்குத்தான் அனுப்ப முடியும். வியாபாரம் செய்ய முடியாது. இங்கே சினிமா கலை

''இவ்பொருள்' உவமை அணிக்கு ஓர் உதாரணம் சொல்...''
''எங்க அப்பாவின் பர்ஸ்!''
- நாமக்கல் பாலு



மட்டுமல்ல. வியாபாரமும் தான்.

**உங்கள் மனைவி உங்களுக்காக ஒரு கதை தயார் செய்து சொன்னதாகவும், அது உங்களுக்குப் பிடித்துப்போய், அவரையே இயக்கும்படி நீங்கள் சொன்னதாகவும் செய்தி வெளியாகி இருக்கிறதே?**

அது கற்பனைச் செய்தி!



"நர்ஸ்... எட்டாவது வார்டு பேஷண்ட் எப்படி இருக்காரு...?"

"நல்ல பணக்காரர் மாதிரிதான் தெரியறாரு டாக்டர்...!"

- இடைப்பாடி ஜெ. மாணிக்கவாசகம்

**ஒரு பக்கம் விஜய் படத்தின் இசையை வெளியிட விக்ரம் வருகிறார். இன்னொரு பக்கம் உங்கள் வயதையொத்த இளம் ஹீரோக்கள் சிலர் தனிப்பட்ட முறையில் பத்திரிகைப் பேட்டிகளில் தாக்கிக் கொள்கிறார்கள். ஆரோக்கியமான நட்பும் இல்லை, போட்டியும் இல்லை போலிருக்கிறதே?**

மற்றவர்களைப் பற்றி நான் புறம் சொல்ல விரும்பவில்லை. எந்தப் பத்திரிகைப் பேட்டியிலும் நான் யாரையும் திட்டவில்லை. நான் என் வேலையை ஒழுங்காகச் செய்து கொண்டிருக்கிறேன். எனக்கு நாற்காலி கொடு, நான் நம்பர் ஒன், நம்பர் டு என்றெல்லாம் புலம்பிக்கொண்டிருக்கிற ஆள் நான் இல்லை.

ஓட்டப்பந்தயத்தில் ஓடுகிறவனுக்கு வெற்றிக்கோடுதான் கண்களில் தெரியும். பக்கத்து டிராக்கில் ஓடுகிறவர்கள் எப்படி ஓடுகிறார்கள் என்று நான் பார்ப்பதில்லை. பக்கத்தில் ஓடுகிறவன் கல்லெடுத்து என் மீது அடித்தால், அடியை வாங்கிக்கொண்டு நான் ஓடிக்கொண்டேதான் இருப்பேன். குனிந்து கல்லெடுத்தவன் பின் தங்கி விடுவான். இங்கே கல் வீசுகிறவர்கள் ஒரு சிலர் மட்டும்தான். மற்றபடி ஆரோக்கியமான போட்டியும் நட்பும் இல்லாமல் சினிமா இயங்க முடியாது.

**அப்பாவும் அண்ணனும் வெற்றிகரமான இயக்குனர்களாகத் தங்களை நிரூபித்திருக்கிறார்கள். தனுஷுக்குள்ளும் ஒருவர் இயக்குனர் ஒளிந்திருக்கிறார் இல்லையா?**

நிச்சயமாக! மசாலா படம் எடுத்தாலும், கலைப்படம் எடுத்தாலும் உணர்வுபூர்வமாக இருந்தால்தான் சினிமா. அதற்கு நிறைய வாழ்க்கை அனுபவம் தேவை. தயாரிப்பாளர் நஷ்டம் அடையாமல் படம் எடுக்கிற பக்குவம் கற்றுக்கொள்ள வேண்டும். அதன்பிறகுதான் இயக்கம்.

**மீண்டும் அண்ணன் இயக்கத்தில் 'புதுப்பேட்டை' படம். இதில் உங்களுக்கு என்ன ரோல்?**

'புதுப்பேட்டை'யில் என்ன எதிர்பார்த்து தியேட்டருக்குள் ரசிகர்கள் வரப் போகிறார்களோ அது படத்தில் இருக்காது. 'புதுப்பேட்டை' புதிய தலைமுறையின் சினிமா, புதிய சிந்தனைகளின் சினிமா, புதிய தொழில் நுட்பங்களின் சினிமா!

**திருமண வாழ்க்கை எப்படிப் போகிறது?**

ஓய்வு நேரமே கிடைப்பதில்லை. கிடைத்தால் தூங்குவதில்தான் சுகம். கூட்டுக்குடும்பமாக இருக்கிறோம். சந்தோஷம், உற்சாகம், மகிழ்ச்சி என்று தெளிந்த நீரோடை போல வாழ்க்கை இனிப்பாக இருக்கிறது. நான் நிதானமாக இருக்கிறேன். நிறைவாக இருக்கிறது.

பேட்டி: **ஆர்.சி. ஜெயந்தன்**

முழுமையான பேட்டிக்கு,
Kalki@kalkiweekly.com

**ஞா**யிற்றுக்கிழமை என்பதால், ஒய்யாரமாக ஊஞ்சலில் படுத்து தமிழ் செய்தித்தாளைப் புரட்டிக் கொண்டிருந்தேன்.

அழைப்பு மணி ஒலித்தது. கதவைத் திறந்தேன்.

வெளியே நின்றிருந்தவருக்கு என் வயது இருக்கலாம். மொடமொடவென்று கதர் வேட்டி. வெள்ளைக் கதர்ச் சட்டை. பாக்கெட்டில் எட்டிப் பார்க்கும் பேனா மூடி. தலை பாதிக்கு மேல் வழுக்கையாகியிருந்தது. மிச்சமிருந்த முடிகளை அதை மறைக்க விரவியிருந்ததில், பாலைவன மணலில் காற்று போட்ட கோடுகள் போல கறுப்பு வரிகள்.

என்னைப் பார்த்ததும் உதடுகள் விரிந்தன. பற்கள் எல்லாம் தெரிய, "டேய், பரசு" என்று கப்பென்று கட்டிப் பிடித்துக் கொண்டார்.

நான் பதறிப் பின்வாங்க, "டேய், என்னைத் தெரியலயாடா? மகாதேவன்டா" என்றபடி உரிமையுடன் நுழைந்தார்.

"எந்த மகாதேவன்?"

"நீ அப்படியே இருக்கியே, பரசு. நான் அவ்வளவு மாறிட்டேனா? மொட்டை மகாடா"

சடக்கென்று நினைவு களில் அந்த முகம் புரண் டது.

மகாதேவன். என் பள்ளி நண்பன். கிட்டத்தட்ட முப்பது வருடங்களுக்குப் பிறகு

# சிறப்பு விருந்தினர்

சந்திக்கிறான்.

ஒரு முறை எங்கேயோ வேண்டுதலுக்காக மொட்டை அடித்துவிட்டு பள்ளிக்கு வந்துவிட, அன்றிலிருந்து நண்பர்களுக்குச் செல்லமாக மொட்டை மகாவானவன்.

முப்பது வருடம் கழித்து பள்ளி நண்பனைப் பார்த்தால், குபீரென்று சந்தோஷம் பீறிட்டுக் கொண்டு கிளம்ப வேண்டாமோ? மனத்தில் அச்சமும் சந்தேகமும்தான் புரண்டன.

இத்தனை வருடங்களுக்குப்





சுபா

பிறகு எங்கேயிருந்து புறப்பட்டு வந்திருக்கிறான்? எதற்காக வந்திருக்கிறான்?

"வா, வா" என்றேன், வலிய புன்னகையை வரவழைத்துக்கொண்டு. "இந்த அட்ரஸை எப்படிக் கண்டுபிடிச்சே?"

"அதான் பீதிக்கதை மன்னன் பரசுன்னு ஓம்மூஞ்சியை ரோடு பூரா போஸ்டர் அடிச்சு ஒட்டியிருக்காங்களே? நீ இந்த ஏரியாவுல இருக்கேனு தெரியும். பஸ் ஸ்டாண்ட் பக்கத்துல விசாரிச்சேன். வழி காட்டினாங்க..."

இவனை எப்படி மறக்க முடியும்?

வாரத்தில் நான்கு நாட்களுக்காவது ஒரே டிராயரில் தான் வருவான். அந்த டிராயரிலும் இரண்டு இடத்தில் தையல் போட்டிருக்கும். ஆனால், பேச்சு?

"வீட்ல இருக்கற பத்து டிராயரும் சைஸ் சின்னதாயிருச்சுடா... அப்பா புதுசா நாலு துணி வாங்கிக் கொடுத்திருக்காரு. ஆனா, டைலர் காசிக்குப் போயிருக்காரு" என்று அடித்து விடுவான்.

"அப்பா, தெனம் வீட்டுக்கு வந்ததும் ரெண்டு ரூபா எனக்குக் கொடுத்துருவாரு... அதை அப்படியே உண்டியல்ல போட்டு வச்சிருக்கேன். பணம் சேர்ந்ததும் சைக்கிள் வாங்கிக்கப் போறேன்"

"இன்னிக்கு எங்க வீட்டுப் பக்கத்துல சினிமா எடுத்தாங்கடா. எம்.ஜி.ஆர். என்னைக் கிட்டக் கூப்பிட்டாரு... அவர் கையால சாக்லேட் கொடுத்தாரு... 'அடிமைப்பெண்' படம் வந்ததும் பாரேன்... நானும் அதுல இருப்பேன்."

எந்தப் பொய்யைச் சொன்னாலும், கண்களை அகலமாக விரித்து, உண்மை போலவே சொல்வான்.

"நாளைக்கு எனக்குப் பிறந்த நாள்டா. என்ன வேணுமோ, கேளு, தரேன்னு அப்பா சொல்லியிருக்காரு" என்று அவன் பீற்றிய தினத்தில் எனக்குள் சாத்தான் புகுந்தது.

"எங்களையெல்லாம் சினிமாவுக்கு அழைச்சிட்டுப் போயேன்..." என்று சவாலாகச் சொன்னேன்.

மறுநாள் அவமானப்பட்டு நிற்பான் என்று நான் நினைக்க, அவன் கையில் ரூபாய் நோட்டுகள் புரண்டன.

"பசங்க எல்லாரையும் சினிமாவுக்கு அழைச்சிட்டுப் போன்னு எங்கப்பா காசு கொடுத்தாருடா..."

பொதுவாக எதையும் மிகைப்படுத்திச் சொல்வான் என்று தெரிந்திருந்தும், சினிமா போகும் ஆசையில் அந்தக் கதையை மட்டும் கேள்வி கேட்காமல் அப்படியே ஏற்றுக் கொண்டோம்.

சினிமா முடிந்து வந்தபோது, வெளியே அவன் அப்பா கோபமாக நின்றிருந்தார். அவர் கைக்கு அகப்படாமல் அவன் அப்படியே ஓடிப்போனான்.

மறுநாள் எங்களையெல்லாம் தலைமை ஆசிரியர் கூப்பிட்டார்.

"மகாதேவனோட அப்பா தினக்கூலிக்கு வீடுங்களுக்கு சுண்ணாம்பு அடிக்கறவரு... அவங்க ரேஷன் வாங்க வச்சிருந்த பணத்தை எடுத்துக்கிட்டு வரச் சொல்லியா சினிமா போனீங்க?" என்று முட்டிபோட வைத்துவிட்டார்.

அப்புறமும் மகாதேவன் மாறவில்லை.

'சைக்கிள் வாங்கிட்டேன், ஸ்கூலுக்குக் கொண்டு வந்தா தொலைஞ்சு போயிடும்'

'இந்த லீவுக்கு நாங்க குடும்பத்தோட தில்லி போகப் போறோம்'

'எதிர்வீட்டுப் பொண்ணு பத்து லவ் லெட்டர் கொடுத்திட்டா'

தன்னை எல்லோரும் மதிக்க வேண்டும் என்று ஏதாவது உடான்ஸை வீசிக் கொண்டேயிருப்பான்.

"இப்ப என்ன பண்றே?" என்றேன்.

"'எம்.கே.பி.'ன்னு கேள்விப்பட்டிருப்பியே? அந்த கம்பெனில இருக்கேன்" பாக்கெட்டைத் தொட்டுப் பார்த்து ஏமாற்றத்துடன், "பிஸினஸ் கார்டெல்லாம் கார்லயே வச்சிருக்கேன்..." என்றான்.

'டேய், நீ இன்னுமா மாறவில்லை?' என்று என் மனம் ரகசியமாகக் கேட்டது.

"பரசு, எங்க கம்பெனில தமிழ் மன்றம் சார்பா கருத்தரங்கம் வச்சிருக்காங்க. நீ சிறப்பு விருந்தினரா வந்து கலந்துகிட்டா, எனக்குப் பெருமையா இருக்கும்டா"

கம்பெனியும் இருக்காது. தமிழ் மன்றமும் இருக்காது.

"கார் அனுப்பி பிக்கப் பண்ணிப்பாங்களா?"

புன்னகைத்தான். "அதெல்லாம் ஏற்பாடு பண்ணிடலாம்" என்றான் அமர்த்தலாக.

இனேஷ் புத்தகங்களுடன் மெள்ள வெளியே வர, "என் மகன்... பத்தாவது படிக்கறான்" என்றேன்.

"நானும் ஒங்கப்பாவும் ஆறாம் கிளாஸ் லேர்ந்து எஸ்.எஸ்.எல்.சி. வரைக்கும் ஒண்ணாப் படிச்சோம். நாங்கல்லாம் எட்டாவது படிக்கறப்பவே, சிறுவர் மலர்ச் சோலைனு ஒரு கையெழுத்து

''வாழ்க்கையில் சிரமம் வரலாம். ஆனால் சிரமமே வாழ்க்கையானால் என்ன செய்வது சாமி?''

''ஆசிரமம் ஆரம்பி..''

- ச. தமிழ்ச் செல்வி



பத்திரிகை ஒங்கப்பா நடத்தினான். நாப்பது பக்கம் நோட்டுல கதை, கவிதை எல்லாம், இவனே எழுதுவான். நான் கூட அதுல ரெண்டு மூணு படம் வரைஞ்சுருக்கேன். இல்லடா பரசு?''



''தினசரி வந்து மாமூல் குடுக்கறியே... ஏன்?''
''தொழில் ஊக்குவிப்பு வாரம் கொண்டாடுறோம்!''
- அம்பை தேவா

எனக்குத் தெரியாமல், அவனாக அந்தப் பத்திரிகையை எடுத்து, அதில் இரண்டு படங்களைக் கிறுக்கி விட்டு, என்னிடம் ஒட ஒட வாங்கிய அடிகளைப் பற்றி அவன் சொல்லவில்லை.

அப்படி இப்படி பழைய கதையைப் பேசிக் கொண்டிருந்து விட்டு, அம்பது இருந்தாக் கொடுடா, நூறு இருந்தாக் கொடுடா என்று அவன் கேட்கப் போகும் தருணத்தை எதிர் பார்த்து விழிப்புடன் காத்திருந்தேன்.

"எப்படி அங்கிள், திடீர்னு எங்கப் பாவைப் பார்க்கணும்னு தோணிச்சு?"

''கடவுளோட அருள் கண்ணா... இல்லேன்னா, கரெக்டா ஒங்க ஏரியாவுல நொழையும்போது, என் காருல பங்க்சர் ஆகணுமா? டயரை மாத்தறதுக்குள்ள நான் பரசுவைப் பாத்துட்டு வந்திடறேன்னு வழி விசாரிச்சிட்டு வந்துட்டேன்''

என் பக்கம் திரும்பினான். "போன வருஷம் ஒரு நாள் டி.வி. பேட்டில உன்னைப் பாத்தேன்டா. எல்லார்கிட்டயும் இது என் கிளாஸ்மேட் தெரியுமான்னு பெருமையாப் பீத்திக்கிட்டேன். அப்பவே அட்ரஸ் விசாரிக்கணும்னு நெனைச்சேன். பிஸினஸ் டூருக்காக ஜப்பான் போயிட்டேனா, மிஸ் ஆயிருச்சு..."

ஆரம்பித்து விட்டான். ஜப்பான் போனானாம். கையில் லோக்கல் வாட்ச் கூட இல்லை.

"ஏன்டா, வீட்டுக்கு வந்தவனுக்கு ஒரு காஃபி கூட கெடையாதா?"

கிச்சனுக்குள் போனேன். குரலை இறக்கி, "இவன் ஒரு உடான்ஸ் மாஸ்டர். எதுக்காக வந்திருக்கான்னு தெரியல... சட்டுபுட்டுனு ஒரு காஃபியைக் கொடுத்து அனுப்பணும்."

"வேலைக்காரிக்காக தண்ணி விட்டு வச்ச ரெண்டாவது டிகாஷன் தானே இருக்கு?"

"போறும், போறும்... அவனுக்கு அது போறும்."

மறுபடி ஹாலுக்குப் போய் அமர்ந்த போது, மகாதேவன் என் விசிட்டிங் கார்டைப் புரட்டிக் கொண்டிருந்தான்.

"ஒன் பையன் கிட்ட போன் நம்பர் கேட்டேன். டிராயர்லேர்ந்து கார்டையே எடுத்துக் கொடுத்தான்"

எனக்கு வந்த கோபத்திற்கு கையில் ஆஸிட் பாட்டில் கிடைத்திருந்தால் அப்படியே அந்த உத்தமசிகாமணியின் முகத்தில் அடித்திருப்பேன். என் பிரத்யேக போன் நம்பர் வரை மகாதேவன் கைக்குப் போய்விட்டது.

சியாமளா காஃபியுடன் வந்தாள். மகாதேவன் எழுந்து வணக்கம் சொன்னான். காஃபியை ருசித்து விட்டு, சற்றும் முகம் களிக்காமல், "சூப்பர்" என்றான்.

"நாம ரெண்டு பேரும் ஒரு தடவை மழைல நனைஞ்சோமே. ஒங்கம்மா சுடச் சுட ஒரு காஃபி கொடுத்தாங்களே, அந்த டேஸ்ட் இன்னும் நாக்குல இருக்கு. ஏன் பரசு, சினிமாகாரங்கள்லாம் உனக்குப் பணத்தை அள்ளித் தருவாங்களாமே? அப்படியா?"

எங்கெல்லாமோ சுற்றி விட்டு இதோ மையத்துக்கு வந்துவிட்டான்.

"பேசின பணத்தைக் கூட முழுசாத் தராம ஏமாத்தறவங்க தான் அதிகம்..." என்றேன், கவனமாக. இதற்கு மேல் தாக்குப் பிடித்தால் எனக்குத் தான் ஆபத்து.

இன்றைக்கு உன்னை அவமானப்படுத்தாமல் விடுவதில்லை. அப்பொழுதுதான் இன்னொரு தடவை என்னைத் தேடி வர மாட்டாய்.

"எனக்குக் கொஞ்சம் வெளில வேலை இருக்கு மகா. வாயேன். ஒன்னை கார் நிக்கற இடத்துல விட்டுடறேன்"

"உனக்கு எதுக்குடா சிரமம்?" என்று நெளிந்தான்.

இல்லாத காரை என்னிடம் எப்படிடா காட்டுவாய்?

அழைப்பு மணி ஒலித்தது.

திறந்தேன்.

வாசலில் சில்வர்க்ரேயில் ஒரு பென்ஸ் கார் நின்றது. சீருடை அணிந்த டிரைவர் கதவைத் திறந்து வைத்திருக்க, கோட் அணிந்த ஓர் இளைஞன் படு மரியாதையுடன் இறங்கினான். கையில் இருந்ததை மகாதேவனிடம் முதுகை வளைத்துக் கொடுத்தான்.

மகாதேவன் அந்த சிறு நகைப்பெட்டியை என்னிடம் நீட்டினான். "பி.ஏ.வை கடைக்கு அனுப்பி வாங்கிட்டு வரச் சொன்னேன்."

என் வயிற்றுக்குள் எதுவோ பிடித்து இழுத்தது.

"எ...எ... எதுக்கு இதெல்லாம்?" என்று வாய் குழறியது.

குறைந்த பட்சம் ஐந்து பவுனில் தங்கச் சங்கிலி மினுமினுவென்று மினுக்கியது.

கோட் இளைஞனிடம் திரும்பி, "தமிழ் மன்றத்து செக்ரட்டரியை விட்டு இவர் கிட்ட பேசச் சொல்லு..." என்று என் கார்டை அவனிடம் கொடுத்தான். காருக்குள்ளிருந்து தோல் பர்ஸ் எடுத்து, தன் கார்டைக் கொடுத்தான்.

பார்த்தேன்.

எம்.கே.பி.யின் மேனேஜிங் டைரக்டர் என்று எளிமையான தங்க எழுத்துக்கள் அறிவித்தன.

சியாமளாவைப் பார்த்து கைகளைக் கூப்பினான்.

"வரேன் தங்கச்சி... எல்லாருமா ஒரு நாளைக்கு என் வீட்டுக்கு வந்து கௌரவிக்கணும்..."

என் தோளைத் தட்டினான். "வரேன்டா"

அந்த 'டா' எனக்கு வலிக்கவில்லை. ●



"எந்த சீரியலையும் விடாம உங்க மனைவி பார்த்துடுவான்னு சொல்றீங்களே... கரண்ட் பில் எகிறிடுமே?"

"அழுது தொலைக்க வேண்டியது தான்..."

- சாம்பவீ

---



"டி.வி. மெகா சீரியல்களால் ஆயிரக் கணக்கில் சம்பாதிப்பதா சொல்றீங்களே... சீரியலில் நடிக்கிறீங்களோ?"

"இல்ல, சீரியல் பற்றி ஜோக்குகள் எழுதுறேன்!"

- கு.அருணாசலம்

## சீசன் சிந்தனைகள்

# தர்மம் நிலை காக்கும்!

**வி**த்தை நன்றாகக் கைவந்து விட்டால் மனிதனுக்கு நிலை கொள்ளாது. கைவந்த கலையோடு இலேசாக விளையாடிப் பார்க்கத் தோன்றும். அப்புறம் அதை நன்றாகப் பந்தாடிப் பார்த்துவிட வேகம் பிறக்கும். ரசிப்பதற்குக் கூட்டமும் சேர்ந்துவிட்டால், அதைத் தக்க வைத்துக் கொள்ளவும் பெருக்கவும் ஆசை பிறக்கும். கலையின்பால் இருக்க வேண்டிய விசுவாசம் கூட்டத்தை நோக்கித் திரும்பும். உள்நோக்கிச் செல்ல வேண்டிய பார்வையும் மனமும் திசைமாறி புறத் தேடலில் வழி தப்பித் தொலைந்து போய்விடும்.

இந்த விபத்திலிருந்து கலைஞர்களைக் காப்பது தான் 'கிளாஸிஸம்' என்று ஆங்கிலத்தில் சொல்லப்படுகிற சாஸ்திரீய எல்லைக்கோடு. பாரம்பரியம், வழிவழியான பந்ததி போன்றவற்றின் அடிப்படையில் வரையப்படும் இந்த எல்லைக் கோடு சூட்சுமம் மிக்கது. படைப்பாளியின் தனித்தன்மைக்கும் கற்பனைக்கும் ஏற்ப அது வளைந்து கொடுக்கும். ஆனால், ரசிகனின் மனத்தைப் பரவசப்படுத்துவதற்குப் பதில் வெறுமே கிளுகிளுப்பூட்டிச் செல்வதையோ, அவனைக் கீழே இழுப்பதையோ இந்த லக்ஷ்மண ரேகை அனுமதிக்காது.



* கடம் சுரேஷ்



* திருச்சி சங்கரன்

கலையும் கைவந்து இந்தக் கட்டுப்பாடும் கைவந்தவர்கள் பாக்கியசாலிகள். தங்களையும் உயர்த்திக் கொண்டு ரசிகர்களையும் உயர்த்த இவர்களால் முடிகிறது. அத்தகைய



தம்புரு



• நர்த்தகி நடராஜ்



• ஆர்.கே.ஸ்ரீகண்டன்

பாக்கிய சாலிகள் நால்வரைப் பற்றி மகிழ்ச்சியும் மனநிறைவும் ஏற்படுகிறது :

**ந**ர்த்தகி நடராஜ். கிட்டப்பா பிள்ளை என்கிற பரத குருவின் நேரடி சிஷ்யை இவர். மிகத் திருத்தமான அடவுகளுக்கும், நாட்டியத்துக்கு அலாதியான கௌரவம் சேர்க்கும் அங்கசுத்தத்துக்கும் பெயர் போன கிட்டப்பா பாணியை அப்படியே கட்டிக் காக்கிறார் நர்த்தகி. அதற்கு விசேஷமானதொரு பக்தி மெருகும் கூட்டி அவர் தரும் போது சிலிர்ப்பேற்படுகிறது. இவர் சரவண பவகு கனே என்ற பாபனாசம் சிவன் கீர்த்தனையை வர்ணமாக அமைத்துக் கொண்டு ஆடினார். கந்த புராண காட்சிகளை விவரித்த அவரது அளவான ஆழ்ந்த பாவம், இறுதிக் காட்சியாக வள்ளி - தெய்வானையுடன் முருகன் மயில் மீது ஆரோஹணித்து அருள் புரிந்த கட்டத்தில் உயிர்ப் பெற்றெழுந்த சித்திரமாகப் பரவசப்படுத்தியது.

**ஆ**ர்.கே. ஸ்ரீகண்டன் கல்யாணி ராகம் பாடினார். முதிர்ந்த வயதிலும் உயர்வான சுருதி சுத்தம். அச்சில் வார்த்தெடுத்த கச்சிதத்தோடு ஸ்வரஸ்தானங்களில் குரல் அனாயாசமாகப் பதிகிறது. 'கல்யாணியில் என்னவெல்லாம் செய்ய முடியும் பார்த்தீர்களா?' என்று சவால் விடாமல், 'கல்யாணியில் எப்பேர்ப்பட்ட பெருமைகள் பொதிந்துள்ளன பாருங்கள்...!' என்று

நெகிழ்ச்சியோடு பகிர்ந்து கொள்ளும் அணுகுமுறை.

**ப**ல சங்கீத கலைஞர்களைப் போல் கையில் கனமான பொன்னகை (பிரேஸ்லெட்) அணிந்திருக்கிறார் திருச்சி சங்கரன். ஆனால் அவர் கரங்களே ஆபரணங்கள் - மிருதங்கத்துக்கு; அவர் வாசிப்பு ஆபரணம் - கச்சேரிக்கு. மிருதங்கத்தில் சுருதி சேர்க்கிறபோதுகூட இனிமையாய் நாதம் ரீங்கரிக்கிறது. சங்கரன் பிறந்தது காவிரிக் கரையில் என்றாலும் இப்போது வசிப்பது கானடாவில். அலாதியான கற்பனைகள் அவர் மூளையிலிருந்தும் மனத்திலிருந்தும் நயாகராவாகப் பொழிய, அவரது விரல்கள் அவற்றை அடங்கி ஓடும் ஆழமான காவிரிக்கரை ஒலிச்சித்திரமாக்கித் தருகின்றன. நாதத்தின் தூய்மையும், ஒலி வேறுபாடுகளின் தெளிவும், எந்தவொரு இடத்திலும் வரம்பு மீறாத கட்டுப்பாடும் வாசிப்புக்கு கம்பீரம் கூட்டுகின்றன.

**க**டம் சுரேஷ் மிருதங்கத்தின் இரு புற ஒலிகளுக்கு நிகரான எதிர் ஒலிகளைத் தமது வாத்தியத்தில் வழங்க வல்லவர். 'கீர்த்தனைகளின் சொற்களை இவரது கடம் எப்படிப் புரிந்து கொண்டு அர்த்தம் கூட்டுகிறது? வாக்கேயக்காரரின் உணர்ச்சிகளையும் பாடகரின் பாவங்களையும் அந்தப் பானைக்குள் அவர் பொதிந்து வைத்துக் கொண்டு அவ்வப்போது விரல்களால் தட்டித் தூண்டி எழுப்பி வெளியே விடுகிறாரா...?' என்று அதிசயிக்க வைக்கும் வாசிப்புத் திறன்.

**க**ர்நாடக சங்கீதத்தில், கலைஞர்களின் கற்பனை வெளிப்பாடுகளைக் கூட மனோதர்மம் என்று குறிப்பிடுகிறார்கள். அதாவது மனத்தின் (கற்பனையின்) போக்கு ஒரு தர்மத்துக்கு கட்டுப்பட்டுத்தான் இயங்க முடியும்; இயங்க வேண்டும்.

மேற்படி நால்வரும் தர்மத்துக்குக் கட்டுப்பட்டவர்கள். அந்த தர்மம் தலைகாக்கும்!

'என்னால் ஏதுமில்லை
என்றாலே நான் வருவேன்!
அதனால் தான் பாஞ்சாலி
அழைக்கும் வரை செல்லவில்லை...'
- ஸ்ரீ கிருஷ்ணன்

தொலைபேசிச் செய்தி சாருவின் முகத்தில் அதிர்ச்சி அலைகளைப் பரப்புவதை சம்பத்தும் உணர்ந்தான்.

"அம்மா..." என்றபடியே ரிசீவரைப் பிடுங்கி காதில் வைத்தான்.

"சம்பா... அப்பாக்கு திடீர்னு நெஞ்சுவலி வந்து ஆஸ்பத்திரில அட்மிட் பண்ணியிருக்குடா...!"

"என்னம்மா சொல்றே?"

"நேத்து காலம்பற டெல்லி வந்து உடனேயே ஒரு டாக்சி பிடிச்சு நேரே ஹரித்வார் வந்துட்டோம். நேத்து சாயந்தரம் தான் இப்படி ஆச்சு..."

"அப்போ... இப்ப அங்கதான் ஆஸ்பத்திரில இருக்கேளா?"

"ஆமாம். பயப்படும்படியா ஏதுமில்லை. இருந்தாலும் நம்ம ஆத்துக் கண்ணனை வேற காசியில தொலைச்சுட்டோம். அதான் இவருக்கு நெஞ்சை அடைச்சுடுத்து..."

"ஐய்யோ.. என்னம்மா சொல்றே. எப்படி அந்தப் பெட்டி தொலைஞ்சது...?"

"தொ... தொலையலடா... நான் ஒருத்தி - அது மாறிடுத்து... இப்ப அது பத்திரமாதான் இருக்கு. நீ உடனே கிளம்பி வரியா?"

"வரேம்மா... ஏன் உடனே போன் பண்ணலை?"

"பண்ண முடியலடா. சூழ்நிலை அப்படி லைனும் கிடைக்கல! எங்க நினைப்பெல்லாம் அந்த பெருமாள் பெட்டிமேல தான் இருந்தது. எப்படியோ அது பத்திரமா இருக்கு. நல்லவேளை அதுக்குப் பூஜையும் தவறலை. அந்த பெருமாள் இலேசுப்பட்டவர் இல்ல. அதுல இருக்கற குட்டிக் கண்ணன் ஒரு நாத்திகனையே பூஜை பண்ண வெச்சுட்டான்."

"அது யார் நாத்திகன்...?"

"நேர்ல சொல்றேன்... உடனே கிளம்பி வா. சாருவையும் கூட்டிண்டு வா. உங்களுக்காக நாங்க வந்தாலும் நீங்களும் இங்க வரணும்னு விதி இருக்குடா. இல்லேன்னா இப்படி எல்லாம் நடக்குமா?"

"நிச்சயமா.. இனி இவ பேச்சைக் கேட்டெல்லாம் நான் முடிவு எடுக்கப் போறதில்ல. இவ வந்தாலும் சரி, வரலேன்னாலும் சரி. நான் கிளம்பி வரேன்.



24

# எங்கே என் கண்ணன்?

இந்திரா சௌந்தர்ராஜன்

அது மட்டும் இல்லைம்மா.. இனி எனக்கு அந்தக் கண்ணன் தாம்மா குழந்தை..."

சம்பத் சற்றே வெடித்துச் சிதறி விட்டான்.

அடுத்தடுத்து அவள் சொல்லச் சொல்ல பளபளவென்று பக்கத்தில் உள்ள பேட் ஒன்றில் முகவரியைக் குறித்துக் கொண்டான்.



''சரிம்மா... நான் இப்பவே டெல்லி ஃப்ளைட்டை பிடிச்சு சீக்கிரமா வந்து சேரப் பாக்கறேன். நான் இனி எல்லாத்தையும் பாத்துக்கறேன்."

சம்பத்திடம் ஒரு வித உணர்ச்சிப் பிரவாகம். போனை வைத்தவன் ஏனோ சாருவை சட்டையே செய்யவில்லை. அட்ரஸ் புக்கை எடுத்து டிராவல் ஏஜென்சி ஒன்றுக்கு போன் செய்து டெல்லி ஃப்ளைட் டைமிங்கை கேட்டுவிட்டு "இம்மீடியட்டா ஒரு டிக்கெட் புக் பண்ணுங்க" என்றான்.

"ஏன்னா.. நானும் வரேன் - என்னை விட்டுட்டேளே.." என்று பாய்ச்சலோடு முன் வந்த சாருவை ஒரு அரைப் பார்வை பார்த்துவிட்டு ''இரண்டு டிக்கெட்'' என்றான். அவனது தயக்கம். ஒருவித இறுக்கம். அவன் தொலைபேசியில் தன்னை தனிமைப்படுத்திக் கொண்டதுபோல் பேசியது என்று ஒவ்வொன்றுமே சாருவை ஒவ்வொரு வெட்டாய் வெட்டி. வலிக்கச் செய்திருந்தது.

கரகரவென்று கண்களில் கண்ணீருடன் அவனைப் பார்த்தாள்.

''ஏன் இப்படி கோபப்படறேள். உங்ககிட்ட என் வரைல ஒரு ராட்சஸ மாற்றம் தெரியறது."

"தெரியறதா.. சந்தோஷம்... என்ன சொன்னே? ராட்சஸ மாற்றம்னு தானே?"

அவள் தலை மேலும் கீழும் ஆடி ஆமோதித்தது. "சரியாத்தான் சொல்லியிருக்கே. நான் ஒண்ணும் உன்னை மாதிரி அமுக்குக் கண்ணன் இல்லை. எனக்கு எதையும் மூடி வெச்சு ஏமாத்த தெரியாது. மனசுல இருக்கறத கொட்டிடுவேன்.."

"ஐயோ நான் எதை மூ..." சாரு கேவலோடு கேட்க வந்து முடியாமல் போய் ''என்னை மன்னிச்சுடுங்கோன்னா.." என்று அப்படியே அவனது காலடியில் சரிந்தாள். அவன் விறைப்பாக நின்றான். சொற்ப நிமிடங்களில் அங்கே இருவரிடமும் ஏராளமான மாற்றங்கள். மனிதன் என்பவன்

பொம்மலாட்ட பொம்மையை விடவும் சாதாரணமானவன் என்பதற்குச் சான்றாக...

அவள் அவனது காலைப் பிடித்திருந்தாலும் அவள் கைகளில் ஒரு நடுக்கம். அவனாலும் அதை உணர முடிந்தது. அவள் சில்லுச் சில்லாக சிதறிவிட்டாள் என்பதை அப்பொழுதே அவனால் உணர முடிந்தது. மெள்ள இறுக்கம் தளர்ந்தவன் அவள் தலையில் கை வைத்தான். இலேசாக வருடினான். அவளுக்கு அதன் வழியாக ஒரு தெம்பு உள்புக ஆரம்பித்தது.

மெள்ள...

மிக மெள்ள... அவள் உயிர்ப்பிக்கப்பட்டதுபோல எழுந்தாள். என்ன பேசுவது என்றே தெரியாமல் அவனைப் பார்த்தாள்.

"அழாதே சாரு... இனியாவது தெய்வத்தை நம்பு. கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் பண்ற மாதிரி தோணலாம். ஆனா எனக்கு இன்னும் நம்பிக்கை இருக்கு..." - அவன் குரலில் ஒரு வித உறுதி. அவள் அடுத்த நொடி அவனை இறுக்கக் கட்டிக் கொண்டாள். அவன் நெஞ்சுக் கூடே நொறுங்குமளவு கட்டி அணைத்தவள் அப்படியே "உங்களை... உங்களை... நான் சரியா புரிஞ்சுக்கலை. அதான் பயத்துல எல்லாத்தையும் மறைச்சுட்டேன். ஆனா உங்களுக்கு எவ்வளவு பெரிய மனசு. அதுல தான் எவ்வளவு நம்பிக்கை?" அவள் கட்டிக் கொண்ட பிடியை விலக்காமல் சிலிர்த்தபடியே பேசினாள்.

"சரி... சரி... பிரயாணத்துக்கு ஏற்பாடு பண்ணு. நான் போய் டிக்கெட் வாங்கிண்டு வரேன். ஏ.டி.எம்.லயும் பணம் எடுக்கணும்."

"சரின்னா... நான் இப்பவே தயாராகறேன். ஹரித்வார்ல இருபத்தியோரு பேருக்கு, இல்ல, இருநூத்தி பத்துப் பேருக்கு. இல்லையில்ல இரண்டாயிரத்து பத்துப் பேருக்குத் தானம் பண்ணுவோம். எல்லார் கால்லயும் நான் விழறேன்னா..."

"போறும். ரொம்ப உணர்ச்சி வசப் படாதே! இப்ப என்ன... நம்மாத்து கண்ணனையே குழந்தையா நினைச்சுக்க என்னால முடியும். அவனை அலட்சியப் படுத்தினோம் இல்லையா. அதான் அனுபவிக்கிறோம்."

- சம்பத் குரலும் உடைந்து உணர்ச்சிக்குள் வழுக்கத் தொடங்கிவிட்டான்.

அந்த நொடியில் அவர்கள் இருவரையுமே தம் பக்கம் திருப்பியது அழுத்தமான காலிங் பெல் சப்தம். கதவு திறந்துதான் இருந்தது. இருவரும் திரும்பிப் பார்த்தனர்.

வாசலில் நிஜமாகவே கண்ணன்!

நீலத்திருமேனியும், கழுத்தில் மாலையும் சிரத்தில் மயிற்பீலியுமாய், கரத்தில் புல்லாங்குழலோடு நிஜமாகவே கண்ணன்.

இருவருக்கும் நெஞ்சுக் கூட்டுக்குள் ஒரு பனிப் புயல் வீசியது போல் இருந்தது. அந்தக் கண்ணனுக்கு ஆறு வயசு இருக்கலாம். ததக்கு பிதக்கு என்று மழலை நடைபோட்டு வந்து அருகே நின்ற பிறகுதான் தெரிந்தது அந்தக் கண்ணன் பக்கத்து வீட்டு ராஜகோபால் என்பவரின் மகன் விக்ரம் என்பது?

அது மாறுவேஷம்! பின்னாலேயே ராஜகோபாலும் வந்தார்.

"ஹலோ மிஸ்டர் சம்பத்... என்ன ஷாக்கா இருக்கா? இன்னிக்கு எங்க கம்பெனி ஆன்யுவல் டே... ஒரு ஃபேமிலி கெட்டு கெதரும் நடந்தது. அதுல ஃபேன்சி டிரெஸ் போட்டியில விக்ரம் இப்படிக் கண்ணனாயிட்டான். உங்களுக்

''நம்ம தலைவருக்கு கௌரவ டாக்டர் பட்டம் கொடுத்தது தப்பாப் போயிடுச்சு!''

''ஏன்?''

''பார்க்க வர்றவங்க கிட்ட கன்ஸல்டிங் ஃபீஸ் நூறு ரூபாய் வாங்கிடறாரு!''

- கே.ஆர்.தமிழ்செல்வன்



கெல்லாம் காட்டிட்டு அப்புறமா மேக்கப்பை கலைக்கலாம்னு..."

அவர் விளக்கமளித்து முடிக்க சாரு அந்தக் கண்ணனை அப்படியே வாரிக் கட்டிக் கொண்டாள். முத்தமாரி பொழிந்தாள். சம்பத்துக்கும் நடக்கும் சம்பவம் ஒரு அன்றாடமாகவே தெரியவில்லை. பின்னர் சாரு அரை மனதாகக் குழந்தையை ராஜகோபால் வசம் ஒப்புவிக்க அவரும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.



"சின்ன வயசுலேயிருந்தே தலைவர் அரசியல்லேதான் இருக்காரா?"

"ச்சே... ச்சே... அப்ப அவர் நேர்மையா இருந்தாரு...!"

- தஞ்சை தாமு

அந்த நொடி சாருவுக்குள் மின் வெட்டியது போல ஒரு மாற்றம்.

"ஏன்னா...?"

"என்ன சாரு..."

"இப்படி எல்லாம் நடந்ததை அந்த நாடி ஜோசியம் முன்பே சொல்லிடுத்துன்னா..."

"என்ன சொல்றே சாரு...?"

"ஐயோ, எனக்கு இப்பதான் புரியறது. ஒரு நாள் அந்த நோட்டுல இருக்கற பாட்டை எல்லாம் நான் பொழுது போகாம படிச்சுப் பார்த்தேன். அப்ப அதுல நம்ம அப்பாக்கு நெஞ்சு வலி வரும்னு இருந்தது. வேஷம் போட்ட கண்ணன் முதல்ல வருவான். வேதம் சொன்ன கண்ணன் பின்னால வருவான்னுல்லாம் இருந்தது. அப்ப எதையும் புரிஞ்சுக்க முடியலை. இப்ப... இப்பதான் எல்லாம் புரியறது."

சாரு பயங்கரமாக எக்ஸைட் ஆனாள். "அப்படியா?" என்று கேட்டு சம்பத்தும் அந்த நோட்டை எடுத்துப் பார்க்க ஓடினான்.

## காசி!

கைநிறைய ஃபைல்களோடு அந்த அறைக்குள் நுழைந்த கண்ணனை, பயங்கர ஆச்சரியத்தோடு பார்த்தனர் கணேஷும், அனுராதாவும்.

"என்ன பாக்கறீங்க?"

"இல்ல... அந்த தீரஜ் குமாரோட ஆட்டோமொபைல் இண்டஸ்ட்ரி அட்ரஸ்..."

"ஓ... எனக்குத் தெரியாது. நான் திணறப் போறேன்னு நினைச்சுட்டியா? நான் கிட்டதட்ட பாதி வேலையையே முடிச்சுட்டேன். இது மீதி... இந்த ராத்திரி இதைப் பார்த்துட்டா இந்த அசைன்மெண்ட் டோட்டலா ஓவர். அப்புறமா நான் உன் அப்பா விஷயத்துக்கு வரணும்.."

"என்ன சொல்றீங்க. தீரஜ் ஆட்டோ மொபைல்ஸ் கணக்குகளை இந்த ராத்திரி பாத்துமுடிச்சுடுவீங்களா? ஒரு வருஷத்து கணக்குங்க..."

"இருக்கட்டுமே எனக்குத்தான் ஒரு வருஷங்கறது ஒரு நாள் ஆச்சே?"

"வாட்...?"

"நான் தேவர்கள் கணக்கைச் சொன்னேன். நானும் தேவன் மாதிரி. நீ ஏன் கவலைப்படறே? உனக்கு ஒரு சிரமமும் இருக்காது. நான் எதுக்கு வந்தேனோ அதை எல்லாம் முடிக்க வேண்டாமா?"

"அது சரி... என் அப்பா விஷயம்னு ஏதோ சொன்னீங்களே...?"

"ஆமா. உன் அப்பா கொஞ்சம் கூட சுயநினைவு இல்லாம மும்பைல ஒரு சேரிப்பக்கம் சுத்திகிட்டு இருக்கார். அவர் ஜாதகத்துல சந்திர புக்தி வேற. மனசு எப்படி பனிக்கட்டியா உறைஞ்சு கிடக்க முடியும்? அது மகா சமுத்திரம் மாதிரி பொங்கத்தானே செய்யும்? இப்படித்தான் அலைய வைக்கும்..."

கண்ணன் சொன்ன தகவல்கள் கணேஷை அப்படியே ஒரு புரட்டு புரட்டிப் போட்டன.

(தொடரும்)

**சி**வகாசி படம் பார்த்தவர்களுக்கு ஒரு முகம் மட்டும் புதிதாக இருந்திருக்கும். விஜயின் தோஸ்தாக ஆங்காங்கே திரையில் (பெரிய) புள்ளி போல் தெரிந்த புதுமுகம் - ஸ்ரீராம்.

ஸ்ரீராம் ஒரு முழு நேர பாடகர். குரலிலும் உருவத்திலும் எஸ்பிபியை உரித்து வைத்திருப்பதால் மலேசிய தமிழர்களுக்கு ஸ்ரீராம் குரல் என்றால் சர்க்கரைப் பொங்கல்.

''ம்... நான் முதல்ல மார்க்கெட்டிங் பிரிவுல வேலை பார்த்துட்டு இருந்தேன். அப்போ தான் தெரிந்த நண்பர் மூலமா மலேசிய ஹோட்டல்ஸ், கிளப்கள்ல பாட வாய்ப்புக் கிடைச்சுது. அட, இப்படியும் ஒரு பாடகருக்கு வாய்ப்புகள் எல்லாம் உண்டான்னு எனக்கும் உங்களை மாதிரியே ஆச்சர்யம் எழுந்தது. என் குரலைக் கேட்டவங்க எல்லோரும் எஸ்.பி.பியே நேர்ல வந்து பாடறதா நினைக்க, நான் ஹிட் ஆயிட்டேன். மலேசிய தமிழ் மக்களோட டேஸ்ட் ரொம்ப வித்தியாசமானது. இரைச்சல், இரட்டை அர்த்த வரிகள்... இதெல்லாம் சுத்தமா பிடிக்காது. மெலடின்னா உயிரையும் கொடுப்பாங்க. அழகான வரிகளை அப்படி ரசிப்பாங்க. அவங்களோட ஹிட் சாங்ஸ் லிஸ்ட் ரொம்ப வித்தியாசமா இருக்கும். வாய்ப்புகள் அதிகமாக மார்க்கெட்டிங் வேலையை விட்டுட்டு முழுநேர மலேசிய பாடகராயிட்டேன். இந்தச் சமயத்துல திடீர்னு இங்க டீவி சீரியல்ல நடிக்க வாய்ப்பு வர, அதையும் ஏத்துக்கிட்டேன். நாடகங்கள்ல நடிக்க ஆரம்பிச் சேன். இதன் மூலமா வந்ததுதான் சிவகாசி வாய்ப்பு'' கொஞ்சம் மூச்சு விட்டுக்

# தமிழ் பாப் உயிர்த்தெழுமா?

**பா**ப் இசையில் தமிழகம் என்றுமே விதிவிலக்கு. தமிழ் பாப் என்றால் காதைப் பொத்திக் கொண்டு 'ரண்டக்க ரண்டக்க'வை ரசிக்க ஆரம்பித்து விடுகிறார்கள் தமிழ் ரசிகர்கள். இந்த அபாய கரமான சூழலில் 'ஏ மாமாமா' என்றொரு கிராமிய தமிழ் பாப் ஆல்பத்தைத் தயாரித்து வெளி யிட்டுள்ளார் இசையமைப் பாளர் ப்ரவீண்மணி.

எப்படி வந்தது இந்தத் தைரியம்?

"சுரேஷ் பீட்டரின் 'மின்னல்', 'மால்குடி சுபா', 'அனுராதா ஸ்ரீராம்' இவர் களின் தமிழ் ஆல் பங்களுக்கு ஒரு சமயத்தில் மவுசு அதிகமாக இருந்தது. ஆனால் இரண்டா யிரம் வருடத்தின் துவக்கத் தில் எம்.பி.3, ஃப்ரீ டவுன் லோட் போன்ற பிரச்னை களால் இசையுலகம் ஸ்தம்பிக்க ஆரம்பித்தது.



• ஆல்பம் ப்ரஸ்மீட்டில்..

தமிழ் , ஆல்பங்களைத் தயாரித்து வந்த எச்.எம்.வி., மேக்னா சவுண்ட் போன்ற நிறு வனங்கள் தங்களது தயாரிப்பை அடி யோடு நிறுத்தி விட்



# இளமை கல்கி

கொண்டார்.

மியூசிக் வேர்ல்ட் போன்ற இசை வணிக வளாகங்களில் ஸ்ரீராமின் ஆல்பங்களைக் காண

## விஜய்யின் நண்பர்!

டன. இங்குதான் இது போன்ற துர்பாக்கியம். மலேசியா, சிங்கப்பூர், கனடாவில் வாழும் இந்திய, இலங்கை தமிழர்கள் தமிழ் ஆல்பங்களுக்கு அமோக ஆதரவை அளிக்கின்றனர். சினிமா போல தமிழ் பாப் பாடல்களுக்கு விமரிசையாகச் செலவு செய்ய முடியாது. இப்பொழுது எஃப்.எம். ரேடியோக்களில் ஆல்பங்களுக்கு வாய்ப்புக் கொடுக்கிறார்கள். சன் மியூசிக்கில் தமிழ் பாப் பாடல்களை ஒளிபரப்ப ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். பாப் பாடல்களில்தான் வெரைட்டி கொடுக்க முடியும். சுனாமி பற்றி சினிமாவில் பாட்டு அமைக்க முடியாது.

சினிமாவில் என் இசைப் பணி தொடர்ந்தாலும் பாப் பாடல்களில் ஒருவித சுதந்திரமும் திருப்தியும் கிடைக்கிறது. இன்றைய மேல்தட்டு மக்களுக்கு கிராமியப் பாடல்கள் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் மாணிக்க விநாயகம், ஸ்ரீனிவாஸ், கார்த்திக் போன்ற பாடகர்களை வைத்து 'ஏ மாமாமா' ஆல்பம் பண்ணியுள்ளேன். இதற்கு முந்தைய ஆல்பமான 'இசை' ஜெயித்தது போல் இதுவும் ஜெயிக்கும்'' என்றார் ப்ரவீண் மணி.

- கலை

படங்கள் : ஓம்

முடியும். சரி, தமிழ் சினிமா?

''என்ன காரணம்னு தெரியல. ஆனா ஒண்ணு, இங்க அசலூர்காரனுக்குத்தான் மதிப்பு. தமிழனைத் தவிர மத்த எல்லோரையும் சிவப்புக் கம்பளம் விரிச்சு வரவேற்கறாங்க. ஆனாலும் எனக்கு இன்னும் எவ்வளவோ காலம் இருக்கு. காத்திட்டிருப்பேன். மலேசியத் தமிழர்கள் மாதிரி ஒருநாள் ஸ்ரீராம் பேரைத் தமிழ்நாட்டு மக்களும் உச்சரிப்பாங்க'' என்கிறார்.

சிவகாசியில் பாடலையா?

''ரிலீஸுக்கு முன்னாடி விஜய், யூனிட்டுக்கு ஒரு பார்ட்டி வைச்சார். அப்பதான் நான் பாடகர் என்கிற விஷயமே எல்லோருக்கும் தெரிஞ்சுது. இட்ஸ் ஓ.கே'' கீறல் புன்னகை சிந்துகிறார்.

- சநகன்

ஒரு சராசரி பூனையார் என்னென்ன செய்வார்? பாத்திரங்களை உருட்டி பால் குடிப்பார், கொஞ்சி கொஞ்சி மியாவுவார், கால்களுக்கு இடையே புகுந்து சேட்டை செய்வார், நல்ல மூடில் இருந்தால் லைட் டாகவும் கிண்ணத்தில் பால் இல்லை யென்றால் கொஞ்சம் அழுத்தத்துடனும் அவ்வப்போது பிறாண்டுவார்.

ஒஹியோவில் வசிக்கும் காரி ரோஷேஷன் என்பவர் வளர்த்து வரும் டாமி எனும் புஸூ புஸூ பூனையார் மேலே குறிப்பிட்ட அனைத்து சேட்டை களோடு சேர்த்து கூடுதலாக ஓர் ஆச்சரிய மான சங்கதியையும் செய்து அனைவரை யும் ஆச்சரியப்பட வைத்திருக்கிறார். (மற்ற பூனைகளை வெட்கப்படவும் வைத்திருக்கிறார்)

காரி ரோஷேஷனுக்குத் திடீரென்று மாரடைப்பு ஏற்பட்டிருக்கிறது. அவரால் அசையக் கூட முடியவில்லை. உயிர் போகும் வலி. பரிதவித்துப் போனார். தனது எஜமானரைக் கண்ட டாமியாரின் ஊசி மீசை, அதிர்ச்சியில் துடிதுடிக்க நாலு கால் பாய்ச்சலில் அந்தப் பக்கமும் இந்தப் பக்கமும் பரபரவென ஓடினார். ஏதோ ஆபத்து என்று தெரியும், யாரை யாவது உதவிக்கு அழைக்க வேண்டும் என்றும் தெரியும்? என்ன செய்வது? டாமி யாரின் மூளையில் ஒரு பளிச் மின்னல்? தாவி டீபாயின் மேல் ஏறிய அவர், தனது வாலை வேகவேகமாக சுழற்றிய படி ரிசீவரை எடுத்தார். சிறிது நேரம்

# சம்பா சம்பாலே...



அந்த ஹீரோ துருதுரு கார்ட்டூன் கேரக்டராக வானில் பறக்கிறார். பறக்கும்போதே பல்டி அடிக்கிறார். ஒரு மைல் நீளத்துக்கு ஸ்மைல் பண்ணுகிறார். ஃபுட்பாலை ஜெட் வேகத்தில் ஓடி வந்து உதைக்கிறார். உதைபட்ட ஃபுட்பால் போல துள்ளி உருண்டு வந்து விழுகிறார்.

உலகமே கொண்டாடும் ஃபுட்பால் டார்லிங் ரொனால்டினோ இப்போது செம குஷியான ஒரு கார்ட்டூன் கேரக்டராக அவதாரமெடுத்திருக்கிறார். ரொனால்டினோவின் கதாபாத்திரம் கொண்டு வெளிவரும் காமிக்ஸ் குட்டீஸ் மத்தியில் செம சேல்ஸாம்.

'ரொனால்டினோ கச்சா' - இதுதான் அந்த கேரக்டருக்குக் கொடுக்கப்பட்டுள்ள பெயர். பிரபல ஓவியரான மரிசியோ டிசாசோதான் இந்த கார்ட்டூன் கேரக்டரை உருவாக்கியவர். சுறுசுறு கில்லியாக, கால்பந்து விளையாடும் நுணுக்கங் களில் கைதேர்ந்த கள்ளனாக உருவாக்கப் பட்டுள்ளது இந்த கேரக்டர்.

கால்பந்து கடவுளாக உலகம் கொண்டாடும் பீலேவைக் குறிக்கும் 'பீலேசினா' என்ற கார்ட்டூன் கேரக்டரை உருவாக்கியதும் ஓவியர் டிசோசாதான். பீலேவுக்குப் பிறகு இந்தப் பெருமையை பெறும் இரண்டாவது பிரேசில் வீரர் ரொனால்டினோதான்.



இளமை கல்கி

உற்றுப் பார்த்தார். ஸ்பீட் டயல் பொருத் தப்பட்ட ரிசீவர். இதில் ஏதோ

# டாமி 911

ஒரு பொத்தானைத் தட்டினால் போலீஸ் அங்கிள் வந்துவிடுவார். சில விநாடிகள் யோசித்தார் டா:மியார். பிறகு தனது முன் கால் நுனியால் ஒரு பொத் தானை ஒத்தி எடுத்தார். அவர் ஒத்தி எடுத்த தொ பே எண். 911. (எஜமா னர் முன்னரே சில பயிற்சிகளைக் கொடுத் திருக்கிறாராம்).

மறுமுனையில் போலீஸ் அங்கிள் ரிசீ வரை எடுத்துக் காதில் வைத்திருக்கிறார். ஒரு சப்தமும் வரவில்லை. ஜீப்பை எடுத்துக் கொண்டு வீடு வந்து பார்க்கிறார். அவர் பார்த்தது மயங்கிக் கிடந்த ஒரு நபர், விழுந்து கிடந்த டீப் பாய், ஊஞ்சலாடிக் கொண்டிருந்த ரிசீவர், பிறகு எங்கோ ஒரு பொந்திலிருந்து ஒரு சிறிய சப்தம். உன்னிப் பாகக் கேட்டார். 'மியாவ்'.

- மருதன்

"ஒருநாள் டீ.வியில ரொனால்டினோவோட ஆட்டத்தைப் பார்த்தேன். அவரோட வேகமான ஆக்ஷன், விறுவிறு ஆட்டம் அப்படியே எனக்குள்ள ஒரு கார்ட்டூன் கேரக்டரா உருவாக, அப்படியே உயிர் கொடுத்துட்டேன்" என்கிறார் டிசோசா.

இளம் வயதிலேயே பல ஆச்சரிய சாதனைகளை நிகழ்த்தியிருக்கும் ரொனால்டினோ, 2004, 2005 என இரண்டு ஆண்டுகளிலும் 'உலகின் தலைசிறந்த கால்பந்து வீரர்' என்ற FIFA வழங்கும் விருதைப் பெற்றிருக்கிறார். ரொனால்டினோ ஒவ்வொரு முறை கோல் அடித்த பின் மைதானத்தில் 'சம்பா சம்பாலே' என ரம்பா ஸ்டைலில் ஆடும் சம்பா டான்ஸ்தான் அவரது அடையாளமே. அதை ரசிக்கவே அவர் விளையாடும் ஆட்டங்களைப் பார்க்கும் கூட்டமும் உண்டு. அதெல்லாம் சரி... 25 வயது ரோமியோ ரொனால்டினோவின் கேர்ள் பிரெண்ட் யார் தெரியுமா? ஃபுட்பால்தானாம்!



- முகில்



# “கறுப்பா இருந்தா ரஜினினு நினைப்பா?”

“என்னா புதுசா கதை விடுறீங்க? மதுரைக்காரனுக்கு வல்லினம், மெல்லினம் கொஞ்சம் பிரச்னைதான், 'ழ' 'ற' பிரச்னைதான். அதுக்காகத் தமிழ் தெரியாதுன்னு சொன்னா சிரிப்பாங்க.

என்னமோ நான் நாப்பது பக்கம் வசனம் பேசுன மாதிரி சொல்றீங்க. படத்துல நான் பேசுனதே நாலு வார்த்தைகள்தானே... எனக்குப் பதிலா நடிக்கிற சிலோன் மனோகர் மட்டும் ரொம்பத் தெளிவா தமிழ் பேசுவாரா? ரஜினி மட்டும் ரொம்ப அழகா தமிழ் பேசுவாரா...?” கோபமாகக் கேட்டேன்.

“அதெல்லாம் நீ பேசக்கூடாது போ”ன்னு 'என் கேள்விக்கு என்ன பதில்' பட கம்பெனியிலே இருந்து என்னை விரட்டினாங்க. எனக்குக் கோபம் கோபமாக வந்தது. மதுரைக்குத் திரும்பியதும் முகம்மது மர்சூக் சார்கிட்டே நடந்ததை அப்படியே சொன்னேன். அவர் எனக்காக அந்தப் படத்தை மதுரை ஏரியா வாங்க மறுத்துட்டார்.

இந்த விஷயத்தை இதோடு விட்டுட்டு நம்ம ரைஸ்மில் வேலையைக் கவனிக்கலாம்னா முடியலை. காரணம், நான் ரஜினிக்குத் தம்பியா நடிக்கிற விஷயம் ஃபிலிமாலயா பத்திரிகையில் வந்துடுச்சு. எல்லாரும் அதைப் பத்தி விசாரிக்க ஆரம்பிச்சுட்டாங்க. இது என்னடா வம்பாப் போச்சு. நாளைக்கு அந்தப் படம் ரிலீஸாகும்போது அதுல நான் இல்லேங்கறது தெரிஞ்சா ரொம்ப அவமானமாப் போயிடுமே என்ன பண்றது...

அந்தப் படம் வெளி வர்றதுக்குள்ள வேறு ஏதாவது ஒரு படத்திலாவது நடிச்சு, மதுரைக்குத் திரும்பிடறதுன்னு மறுபடியும் சென்னைக்குப் படையெடுத்தோம் நானும் இப்ராஹிமும்.

எக்மோர் லட்சுமி லாட்ஜில் தங்கி சினிமா வாய்ப்புக் கேட்டு அலைந்தோம். தினமும் காலையில எழுந்ததும், பஸ் பிடிச்சு கோடம்பாக்கம் பிரிட்ஜ்ல இறங்குவோம். அங்கிருந்து வடபழனி வரை நடந்தே ஒவ்வொரு சினிமா கம்பெனியா ஏறி இறங்குவேன். “தி.நகர் ரோகிணி லாட்ஜ்ல பாரதிராஜா இருப்பார், போய்ப் பாருங்க”ன்னு சொன்னாங்க. அந்த ஹோட்டலைச் சுத்தி வந்ததுதான் மிச்சம். அவரை நெருங்க முடியலை.

டைரக்டர் டிஎன். பாலு, வசனகர்த்தா பீட்டர் செல்வகுமார் என்னோட போட்டோ ஆல்பம் வாங்கிப் பார்த்து, என் மேலேயே விட்டெறிஞ்சாங்க “கறுப்பா இருந்தா ரஜினினு நினைப்பா.... அவர் ஒருத்தரே போதும் போ போ”ன்னாங்க. அப்போ என் கையில இருந்த ஆல்பத்துல படங்கள் ரஜினி ஸ்டைல்ல போஸ் பண்ணியிருந்ததே அதுக்குக் காரணம்.

ஏவி.எம். பிரசாத், வாஹினி எதிலும் சுலபமா நுழைய முடியல. 'நாடகத்துல நடிச்ச அனுபவம் இருக்கா?'னு சிலர் கேட்டாங்க. 'கலைஞர் - சிவாஜி காம்பினேஷன்'ல வந்த கதை வசனப் புத்தகம் வாங்கிப் படிச்சுட்டு வா'ன்னாங்க.

காரைக்குடி நாராயணன் தெரிஞ்சவர்

என்பதால் எங்கப்பாகிட்டே கடிதம் வாங்கி போய்ப் பார்த்தேன். "சினிமாவுல நடிக்கணுமா தம்பி! உங்கப்பா வசதியான வர்தானே... பணம் கொண்டாங்க, நடிக் கலாம்"ன்னார், "காசு கொடுத்து நடிக் கறதுல எனக்கு இஷ்டமில்லே"னு சொல்லிட்டு வந்தேன்.

அப்புறம் மதுரை மேயர் முத்துகிட்டே சிபாரிசு கடிதம் வாங்கி வந்து அஞ்சுகம் பிக்ஸர்ஸ், பூம்புகார் புரொடக்ஷன் கம்பெனியில் போய்ப் பார்த்தேன். யாரும் கண்டுக்கல. அப்பாவின் நண்பர் நெடுமாறன் அய்யாகிட்டே கடிதம் வாங்கி வந்து சிவாஜி புரொடக்ஷன் போனேன்; அங்கேயும் யாரும் கண்டுக்கல.

என்னடா இது, தி.மு.க சார்பா கடிதம் கொண்டு போனாலும் காங்கிரஸ் சார்பா கடிதம் எடுத் துப் போனாலும் ஒரு பயலும் கண்டுக்க மாட்டேங்கறானேனு நொந்துபோனேன்.

மதுரைக்கு போன் பண்ணி "எம்.ஜி.ஆர் பிக்ஸர்ஸ்ல சொல்ற மாதிரி உங்களுக்கு யாராவது தெரியுமாப்பா?"னு கேட்டதும் அப்பா சத்தம் போட்டார். ''அதெல்லாம் எனக்குத் தெரியாது. பேசாம ஊருக்கு வந்து சொந்தத் தொழிலைப் பார்ரு"னு கண்டிப்போட சொன்னார்.



"இல்லேப்பா. நான் ஒரு நடிகனாகாம மதுரைக்குத் திரும்ப மாட்டேன்''னு சொன்னதும் கோபமாக போனை வைச்சுட்டார். வயிறு காய்ஞ்சா தன்னால ஊருக்கு வருவான்னு அனுப்பிக்கிட்டிருந்த பணத்தையும் நிறுத்திட்டார்.

ஒரு சாப்பாடு வாங்கி இரண்டு பேர் இரண்டு நாள் வைச்சு சாப்பிட்டோம், வயிறு காய்ஞ்சாலும் பொருட்படுத்தாமல் வாய்ப்புத் தேடி அலைஞ்சோம். சில நாள் பட்டினியாகவும் போனது. ஆனாலும் பட வாய்ப்பு கிடைக்கிற மாதிரி தெரியல. அப்போ எனக்கு மறுபடியும் கைதூக்கி விட இறைவன் முகம்மது மர்சூக் சாரை அனுப்பி வைத்தான்.

மாப்பிள்ளை விஜியை நான் முதல் முதலா பார்த்தது 'சாமந்திப்பூ' படத்தோட ஷூட்டிங்கில்தான். அந்த படத்துல ஷோபா ஹீரோயின்; மாப்பிள்ளைக்கு அதுல இரண்டே இரண்டு சீன்தான். அதுல நடிக்கும்போது நாங்க சந்திச்சு பேசிக்கிட்டிருந்தப்ப.

''என்னால சினிமாவுல முன்னுக்கு வர முடியுமா சார்? நான் ரொம்ப கறுப்பா இருக்கேன். இந்தப் படத்துல இரண்டு சீன் நடிச்சேன். அதுக்கு டப்பிங்கூட பேச விடல, வேற யாரோ பேசறாங்க...'' அப்படின்னு ரொம்ப ஆதங்கப்பட்டார். அவரோட வேதனை எனக்குப் புரிஞ்சுது. அதேசமயம் அந்த இரண்டு காட்சிகளில் நடிக்கும்போது அவர் காட்டிய வேகத்தையும் ஆர்வத்தை

அவர் என்னை டைரக்டர் எம்.ஏ. காஜாவிடம் அழைத்துட் போனார், "இவன் என் தம்பி! இவனுக்கு உங்க படத்துல ஒரு நல்ல வாய்ப்புக் கொடுக்கணும். உங்க படத்தோட மதுரை ஏரியாவை நானே நல்ல விலைக்கு எடுத்துக்கறேன்" என்றார்.

''அண்ணே! நீங்க சொல்லிக் கேட்க மாட்டேனா... இந்தத் தம்பி நம்ம படத்துல நடிக்குது. தம்பி அடுத்த மாதம் ஷூட்டிங் வந்துடுங்க. கொஞ்சம் வில்லத்தனமான ஒரு கேரக்டர் இருக்கு பண்ணுங்க. இந்த கேரக்டர் நல்லா பேசப்படும், உங்களுக்கு நல்ல எதிர்காலம் அமையும். அப்புறம் தம்பி இது சின்ன பட்ஜெட் படம். காசு, பணம் பெரிசா எதிர்பார்க்காதீங்க. உங்களுக்கான காஸ்ட்யூம், டிரஸ் எல்லாம் உங்க சொந்தச் செலவுல பார்த்துக்கணும்'' என்று



யும் பார்த்தேன். ஒருநாள் இல்லா விட்டாலும் ஒருநாள் இந்த 'கறுப்பு நிலா' திரைவானில் பிரகாசித்தே தீரும்னு நம்பினேன்.

"கவலைப்படாதீங்க மாப்பிள்ளை. கண்டிப்பா நீங்க முன்னுக்கு வந்துடுவீங்க"னு தட்டிக் கொடுத்தேன். அவரோட தளராத மனசாலும், சலியாத உழைப்பாலும் பெரிய நடிகராயிட்டார்.

பல நடிகர்கள் ஷூட்டிங் இல்லாத நேரங்களில் டாப்பா டிரஸ் பண்ணுவாங்க. நம்மாளு ரொம்ப சிம்பிளா ட்ரஸ் பண்ணிக்குவாரு.

# விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி!

தெரியாத விஷயங்களை எவ்வளவு சின்ன ஆளுங்க சொன்னாக்கூட கேட்டுக்குவாரு. அவருக்கு நண்பரா அமைந்த ராவுத்தர் உயிர் காப்பான் தோழன்னு சொல்கிற மாதிரி பல இக்கட்டுகளிலிருந்து மாப்பிள்ளையைக் காப்பாற்றியிருக்கார்!

- எஸ்.எஸ். சந்திரன் எம்.பி



டைரக்டர் எம்.ஏ. காஜா சொன்னதும் எனக்குள் புதுதெம்பு ஏற்பட்டது.

'இருக்கறதை வச்சே சமாளிப்போமா. புதுசா டிரஸ் வாங்கணுமா... கையில காசு இல்லையே என்ன பண்ணலாம்?'னு யோசித்தேன். அப்போ இப்ராஹிம் இந்த விஷயத்தை திருப்பூர் நண்பர்களுக்குத் தெரிவித்தான். அவ்வளவுதான்! ஒரே வாரத்தில் எனக்காக விதவிதமான டிசைன்களில் டீஷர்ட்கள் புதுசா ரெடி பண்ணி அசத்திட்டாங்க.

'இனிக்கும் இளமை' ரிலீஸானது. மதுரையில் என் வீட்டுக்குப் பக்கத்தில் உள்ள சென்ட்ரல் தியேட்டரில் படம் ஓடியது. எங்கப்பாவுக்கு பெருமை பிடிபடல. சந்தோஷத்தில் தினமும் போய் படம் பார்த்து வந்தார்.

என் வாழ்க்கையில் விளக்கேற்றி வைத்த என் மரியாதைக்குரிய பாஸ் முகம்மது மார்சூக், டைரக்டர் எம்.ஏ. காஜா, திரையுலகில் திருப்புமுனை ஏற்படுத்திக் கொடுத்த டைரக்டர் எஸ்.ஏ. சந்திரசேகர் இவர்கள் என்றென்றும் மறக்க முடியாத மாமனிதர்கள்.

அடுத்து கதை வசன கர்த்தா ஆர். செல்வராஜ் டைரக்ஷனில் 'அகல் விளக்கு' படத்தில் நடித்தேன். அதில் எனக்கு ஜோடி ஷோபா. அவர் பிரபல நடிகையாக இருந்ததால் அவருக்கு முக்கியத்துவம் கொடுத்தாங்க. எனக்கு மேக்கப் போட்டு ஓரமா உட்கார வச்சிடுவாங்க.

ஒருசமயம் அப்படித்தான் மேக்கப் போட்டு காலையிலே இருந்து உட்கார்ந்திருந்தேன். ஷோபாவுக்காக படப்பிடிப்புக் குழுவே காத்திருந்தது. மத்யானம் இரண்டு மணி, பசி வயித்தைக் கிள்ளுது. சாப்பிட உட்கார்ந்தேன். சாப்பாட்டை வாயில வைக்கும்போது, என் கையைப் பிடிச்சுக்கிட்டார் புரொடக்ஷன் மேனேஜர்.

"இன்னும் ஹீரோயின் சாப்பிடல; அதுக்குள்ளே என்ன அவசரம்? வாங்க மேடம் வந்துட்டாங்க நடிச்சு முடிச்சுட்டு வந்து சாப்பிடலாம்"னு இழுத்துட்டுப் போனார். எனக்கு ரொம்ப அவமானமா போச்சு. ஒரு மனுஷன் உழைக்கிறதே சாப்பிடத்தானே...

(சொல்றேன்)

படங்கள் உதவி : சஜோ

# கண்ட நாள் முதல்

சிறுவயதிலிருந்தே சண்டைக் கோழிகளான பிரசன்னா - லைலா இருவரும் வளர்ந்த பின்பும் ஒருவரையொருவர் வெறுப்பேற்றி சுகம் காண்கின்றனர். லைலாவின் குணங்களில் ஒன்றிப்போன வெளிநாட்டுத் தமிழரான கார்த்திக்குமார் அவரைத் திருமணம் செய்யச் சம்மதிக்கிறார். ஆனால் நாளடைவில் கார்த்திக்குமாரின் குணங்கள் மாற, லைலாவுக்கு பிரசன்னா மீது சந்தேகம் வருகிறது. காலம் மாறுகிறது. லைலாவுக்கு உதவுவதாக வரும் பிரசன்னா மெள்ள மனத்தில் இடம் பிடிக்கிறார். க்ளைமாக்ஸில் சுபம்.

கதாபாத்திரங்கள் தங்கள் முடிவைத் தாங்களே தீர்மானிப்பது இன்றைய சமுதாயத்தின் பிரதிபலிப்பு. ராமதாஸின் வசனங்களில் படம் முழுக்க துணுக்குத் தோரணங்கள். ரெஸ்டாரண்டில் லைலா - கார்த்திக் பேசுவதாக இவர் பேசும் நக்கல் ஓர் உதாரணம். நகைச்சுவையும் கதாபாத்திரங்களின் உள்ளுணர்வும் கைகோத்து, கதையைத் தொய்வின்றி நகர்த்துகின்றன.

பிரசன்னாவின் மசாலாத்தனமில்லாத கதைத் தேர்வுகள் பாராட்டத்தக்கது. லைலாவை நாய் வண்டியில் ஏற்றியது முதல் பிரசன்னா செய்யும் கலாட்டாக்களில் இளமைக் கொப்பளிப்பு. என்.ஆர்.ஐ மாப்பிள்ளையான கார்த்திக்குமாரின் வசன உச்சரிப்பு கச்சிதம்.சரி பாதி கோபமும் காதலும் கலந்த லைலாவின் கதாபாத்திரம் படம் முழுக்க ஆக்ரமிக்கிறது. முதல் பாதியில் முறைத்துக் கொண்ட நாயகனும் நாயகியும் பின்னர் காதல் வலையில் விழ்வது பரவசம். காதல் மலரும் தருணங்களில் தாமரையின் வரிகளும் யுவன்ஷங்கர் ராஜாவின் இசையும் துள்ளிசை பாடுகிறது.

நடிகர்களில் புதுமுகங்களைத் தேர்வு செய்த இயக்குனர், தொழில் நுட்பப் பகுதியில் ஜாம்பவான்களை நியமித்திருப்பது அழகான கலவை. 'விஷ்க் விஷ்க்' என்று ஸ்டைல் பண்ணாமல் கதாபாத்திரங்களின் வண்ணங்களுக்கு, காட்சிகளின் தேவைக்கேற்ப கோணங்கள் வைத்திருக்கிறார் பி.சி. ஸ்ரீராம்.

பாடல்களைச் சரியான இடத்தில் பொருத்தவில்லை இயக்குனர். அதே போல் முதல் ரீலிலேயே கடைசி ரீல்களின் தன்மை புரிந்துவிடுகிறது.

கமர்ஷியல் படமாக இருப்பினும் அதிலும் ஒரு தரத்தை, ஸ்டைலை பின்பற்றியிருக்கிறார் ப்ரியா. பிரகாஷ்ராஜ் போன்ற தேடல் கொண்ட தயாரிப்பாளர்கள் இருப்பதால் எதுவும் சாத்தியமாகி விடுகிறது.

**- லஜ்ஜாவதி**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered. No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.



* மத்திய உள்துறை அமைச்சர் திரு. சிவராஜ் பாட்டீல் அவர்களிடமிருந்து டைரக்டர் திரு. S.P. நாயுடு அவர்கள் விருது பெறுகிறார்.

**S.P. Naidu - Ex. President of Madras Diamond Manufacturer's Association & Former Trade Protocol Agent of Romania in India.**

**கீழ்க்கண்ட நோய்களுக்குச் சிறப்பு சிகிச்சை அளிக்கிறோம்**

- மூட்டுவலி (எல்லா வகை) - Arthritis (All Types)
- ருமடாய்டு ஆர்த்ரெடிஸ் - Rheumatoid Arthritis
- குதிகால் எலும்பு வளர்ச்சி - Calcaneal Spur
- வெரிகோஸ் வெயின்ஸ் - Varicose Veins
- கழுத்து, இடுப்புவலி - Spondilitis
- தூக்கமின்மை - Sleeplessness
- ஆஸ்துமா - Asthma
- உடல் பருமன் - Obesity
- சர்க்கரை நோய் - Diabetes
- பார்கின்ஸன்ஸ் - Parkinsons

**அனைத்து வியாதிகளுக்கும் தாங்கள் எங்களிடம் ஆலோசனை பெறலாம்.**

**இங்கு அளிக்கப்படும் சிகிச்சை முறைகள்**

- Therapeutic Herbal Oil Massage
- Herbal Paste Application & Soaking
- Hydrotherapy
- Physiotherapy
- Yoga Therapy
- Oxygen & Relaxation Therapy
- Diet Therapy
- Health Counselling



**பக்க விளைவுகளற்ற மூலிகை மருந்துகளும் கொடுக்கப்படுகின்றன.**

**Team of Doctors**: Expert Doctors in Siddha, Ayurveda, Naturopathy, Yoga / Retired Senior Physiotherapist from Jipmer Medical College, now heads our physiotherapy department.

## அடையார் இயற்கை வைத்திய மையம்

## ADYAR NATURE CURE CENTER ™

Registered Hospital

No. 6, II nd Cross Street, Kasturba Nagar, Adyar, Chennai - 20. Ph: 044 - 2441 3399, 2440 2470.
**email** : adyarnaturecure@yahoo.com **Website** : www.adyarnaturecure.com

குறிப்பு: A/c. Deluxe rooms, Rooms, ஜெனரல் வார்டு, கலர் டி.வி., போன் வசதி உள்ளன
சைவ உணவு மட்டும் வழங்கப்படும். முன்பதிவு அவசியம்.